# புலிகேசி

அல்லது

## சாளுக்கிய குல திலகன்




சென்னை,
ஆர்ச் : காபிரியேல் உயர்தரக் கலாசாலைத்
தலைமைத் தமிழ்ப் பண்டிதன் இலக்கணதயாடிக் கவுண்டிய
இரா. சிவ. சாம்பசிவ சர்மன்
எழுதியது

கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி,
திருவல்லிக்கேணி, சென்னை,
1929

[விலை அணா 10




# புலிகேசி

அல்லது

## சாளுக்கிய குல திலகன்

இலந்தையடிக் கவுணிய

இரா. சிவ. சாம்பசிவ சர்மன்.

இரண்டாவது

# புலிகேசி

அல்லது

## சாளுக்கிய குல திலகன்




சென்னை

அர்ச்: காபிரியேல் உயர்தரக் கலாசாலைத்

தலைமைத் தமிழ்ப்பண்டிதன் இலக்கையடிக் கவுணிய

இரா. சிவ. சாம்பசிவ சர்மன்

எழுதியது.

கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி,

திருவல்லிக்கேணி, சென்னை.

1929



[விலை அணா 10.

D




# முகவுரை

---

இளஞ் சிறுவர்களுக்குத் தேச சரித்திரக் கதைகள் பெரும்பயன் அளிப்பன வாகும். ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு அந்நாட்டுப் பழஞ் சரிதைகளே சிறந்த கருவியாகவுள்ளன. எளிய, இனிய செந்தமிழ் நடையில் தேச சரித்திரக் கதைகள் அமைவுறுமாயின் அவை பிள்ளைகளுக்குப் பல்லாற்றானும் நன்மைகளை விளைவிப்பனவாம்.

இந்திய தேச சரித்திரத்தில் பல சிறந்த கதைகள் செறிந்துகிடக்கின்றன. அவைகள் ஒவ்வொன்றும் பிள்ளைகளால் அறியப்பட வேண்டுவனவே. அவர்கள் தேச சரித்திரம் படிக்குங் காலத்தில் அவைகளை உணர்வார்கள்.

நற்பெருக் கதைகளைப் பலவாகக்கொண்டு திகழ்வது தேச சரித்திரம். அவைகளைத் தனித்தனியாக ஓதி யுணர்வார்களாயின் மாணவர்கள் பெரிதும் பயனுறுவர். ஆதலின் தனித்தனிக் கதைகளாக அவைகளை எழுதித்தர முன்வந்துள்ளேன். அவ்வாறு எழுதப்பட்டனவற்றுள் இது மூன்றாவது நூலாகும்.

புலிகேசி என்னும் இந்நூல் தமிழ் நாட்டுத் தேச சரித்திரக் கதைகளைக் கற்பார்க்குத் திறவுகோல்

போன்று விளங்குவதாகும். ஐந்து ஆறும் நூற்றாண்டுகளில் தென்னிந்தியா முழுவதும் அவன் ஆட்சியிலிருந்தமையும், நரசிம்ம வர்மன் ஜைனனாயிருந்து சைவனாயதும், காஞ்சீபுரத்தில் ஆலயம் எடுத்த அருமைத் திருப்பணியையும், சாளுக்கியர் காலத்தில் சைவம் தழைத்தோங்கியதையும் இந்நூல் நன்கு விளக்குகின்றது. இயன்றளவு ஆராய்ச்சி முறையில் எழுதப்பட்டுக் காலவளவினையும் கொண்டு திகழ்வதாகும் இந்நூல் மாணவர் மனத்தை மகிழ்விக்கும்.

பொதுமறையகம்
திருவல்லிக்கேணி.

அன்பன்
இரா. சிவ. சா. சர்மன்.

———

E

# உள்ளுறை

இரண்டாவது

# புலிகேசி

அல்லது

## சாளுக்கிய குல திலகன்



### 1. தேச சரித்திரம்.

பெற்ற தாயும் பிறந்தபொன் னாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே. (சி. சு. பாரதி).

கடல் புடை சூழ்ந்த உலகில் கல்வியால் நிறைந்த பெரியோர்கள் தங்கள் தாய்நாட்டுச் சரிதைகளை விழைந்து கற்பார்கள். அவர்கள் அவ்வாறு கற்பதற்குப் பல காரணங்கள் உண்டு. ஒரு நாடு முன்னேற்ற மடைய வேண்டுமாயின் அந்நாட்டின் சரிதைகளை அந்நாட்டு மக்கள் ஒவ்வொருவரும் செவ்வனே யுணர்ந்திருத்தல் வேண்டும். அதனால் என்ன பயனோவெனில், தம் முன்னோர் நிலையினை நன் குணர்ந்தோர்களாய்ச் சரித்திரங் கற்போர், தாமும் நல்லன கொண்டு முன்னேற்றமடைய முயலுவர். மற்றும் முன்னோர்களின் கல்வி மேம்பாடு, வாழ்க்கை நிலை, அரசியல் முறை, சமுதாயச் சீர்திருத்தங்கள், படை யெழுச்சி, வெற்றி மேம்பாடு, சிற்ப ஓவியத் துறைகளின் வன்மை, வாணிபம்,

செல்வ நிலை, கைத்தொழில், காலம் முதலியன வற்றை நன்கு விளக்குவன தேச சரித்திரங் களே. ஆதலின் நல்லறிவு பெற்று நாட்டின் நன் மையை நாடுவா ரனைவரும் தேச சரித்திரங்களை விருப் பொடு கற்று மேம்படு துறையில் வாழ்குநர் ஆவர்.

இந்திய நன்னாடாகிய நம் நாடு மிகப் பழமை பெற்றதாயினும் தேச சரித்திரமாகிய ஒரு தனி நூலைப் பெறாதிருந்தமை சாலவும் வருந்தத் தக்கதே யாகும். எனினும் நம் நாடு தேச சரிதத்தை அறவே யடையப் பெறாதது மன்று. முன்னோர்கள் தேச சரித் திரத்திற்குரிய நற்பெருஞ் செய்திகளை இலக்கண இலக்கிய நூல்களினும், இதிகாச புராண நூல்களினும் நுட்பமாக வமைத்துக் காட்டி யுள்ளனர். அதற்குக் காரணம் என்னையோ வெனின் பண்டைக் காலத்தில் தேச சரித்திரமெனத் தனி நூல் ஒன்று இயற்றவேண் டும் என்னும் கருத்துடையா ரல்லர் நம்முன்னோர் என்பதே. நம் முன்னோர் இம்மைப் பயனைப் பெரி தாய்ப் பாராட்டினர் அல்லர் என்பதை அவர்கள் இயற்றியுள்ள நூல்களால் நன்கறிய லாகும். அவர் கள் மிகச் சிறந்ததாகப் போற்றிப் பாராட்டியது மறுமைக்காம் நெறியே யாகும். ஆதலின் அவர் கள் முத்திநெறி எய்துதற்குரிய துறைகளில் நாடி யுழைத்து ஞான நூல்களைப் பெருக்கி யுள்ளனர். அதனாற்றான் இலக்கியம் எனத் தனி நூலின்றி மத சம்பந்த முற்றனவாகவே யாவும் அமைந்து கிடப்பன வாகும். இலக்கணங்களை ஆழ்ந்து நோக்குவார் களுக்கு அவ்விலக்கணச் சூத்திரங்களுள்ளும் தத்துவ

வுணர்ச்சியை நினைப்பூட்டுவதான சூத்திரங்கள் பல செறிந்து கிடத்தல் காணுமற் பேர்கா. உதாரணமாகத் தமிழ் நாட்டுப் பழந்தமிழ் இலக்கணமும், ஐயாயிரம் ஆண்டுகட்கு முந்தியதுமான தொல்காப்பியத்தில், "மெய்யோ டியையினும் உயிரியல் திரியா" "மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்" என்ற சூத்திரங்களையும் பின்னும் பல சூத்திரங்களையும் உரைகளையும் நோக்குமிடத்தும், பொருளதிகாரத்தில் அகத்திணை யியலில் வாழ்க்கை நெறியினையும், புறத்திணையியலில், போர், அரசியல், கல்வி, நிலையாமை முதலியன வற்றையும் விளக்குதலானும் இலக்கணங்களில் தத்துவ ஞானத்தையும் உலகியல் நெறியையும் குறிப்பால் விளக்கியுள்ளார் என்பது போதரும். இத்தகைமை அகநானூறு, புறநானூறு முதலிய சங்கமருவிய நூல்களில் பரக்கக் காணலாம்.

மேனுட்டார் உலகியல் நெறிக் குரியனவற்றையே பெரிதும் நாடி நின்றவ ராவர். அதனல் தத்துவ ஞானத்தில் குறைவுபாடு உற்றூர் என்பது கருத்தன்று. உலகியல் விஷயங்களை மிகவும் பெருக்கியவர் மேனுட்டார் என்பதே கருத்து. ஆதலின் அவர்கள் தங்கள் நாடு முன்னேற்ற மடையும் வண்ணம் பல துறைகளிலும் முயன்று பாடுபட் டுள்ளனர். அவர்கள் மொழியின் இலக்கண இலக்கியங்களில் நாட்டின் இம்மைக்குரியனவே செறிந்திருத்தல் காணலாம். தத்துவ ஞானத்தைப் பெருக்கத் தனி வழியில் அவர்கள் உழைத்துள்ளனர். இதுபோன்ற பல காரணங்களாற்றான் அவர்கள் மொழியும், தொழிலும்,

நாடும், விருத்தியடைந் துள்ளன. விரிக்கிற் பெருகு மாதலின் நாட்டின் முன்னேற்றத்திற்குரிய துறை களில் நன்கு பாடு பட்டவர்கள் மேனாட்டார் என் பதைமட்டுங் கூறி நிறுத்துவாம்.

மேனாட்டார் தேச சரித்திரங்களை யுண்டாக்கு வதில் சிறந்த நோக்க முடையவர்கள். அவர்கள், நாடுகளின் நிலைகளையும், அந்நாடுகளை ஆண்டுவந்த அரசர்களையும், அவர்கள் காலங்களையும், அக்காலங் களில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளையும், அக்காலத்தில் மக் கள் பெற்றிருந்த கல்வி, செல்வம், நாகரிகம், வாணி பம் முதலானவற்றையும் தெளிவுற எழுதி வைத்திருக் கின்றனர். அவ்வாறு புரிந்திடக் கற்றறிந்த மக்களில் சிலர் மிகப் பாடு பட்டு உழைத்து வந்தனர்—வரு வாருமாயினர். அன்னோர்கள் தேச சரித்திரக்காரர் கள் என்றே அழைக்கப்படுவாரு மாயினர். அவர்கள் கல்வெட்டு, சிற்பம், செப்புத் தகடு, நாணயங்கள் முதலியன கொண்டு சரித்திரங்களைத் தம் மதி வன் மையால் நன்கு எழுதி வைப்பவர்கள் ஆவர்.

இந்திய நன்னாடு தனியாகச் சரித்திர மற்ற தாயி னும் சரித்திர மெழுதுதற்கு வேண்டிய கல் வெட்டு, சிற்பம், செப்புத் தகடு, நாணயங்கள் முதலியவற்றை யும் இலக்கிய இதிகாச புராண சரித்திரங்களையும் உடைய தாதலின் அவற்றைக்கொண்டு சீர் தூக்கி நுணுகி ஆராய்ந்து இக்காலத்தில் சரித்திரங்கள் எழு தப்பட லாயின. மற்றும், யாத்திரீகர்கள் அவ்வக் காலங்களில் இந் நாட்டிற்கு வந்து அரசர்களைப்பற்றி யும், மக்களைப்பற்றியும் எழுதி வைத்துள்ளனவும்

பெரிதும் பயன்படுகின்றன. அன்றியும், அவை சரித்திரத்திற்குப் பெரிதும் ஆதாரமாகவும் உள்ளன.

இக் காலத்தில் கல்வி நிறைந்த பெரியார் சிலர் இந்திய நன்னாட்டிற்குத் தக்கதொரு தேச சரித்திரம் அமைந்துளதாதல் வேண்டுமென வுன்னி அரசாங்கத்தாரின் பேருதவியாலும் தங்கள் அரும்பெரும் முயற்சியாலும் கல் வெட்டு முதலிய சாதனங்களைக் கொண்டு கூரிய மதியால் நுணுகி யாய்ந்து பண்டை இந்திய தேச சரித்திரத்தை எழுதி வருகின்றனர். ஆங்கிலேயர்கள் இந்நாட்டைக் கைக்கொண்டது முதல் சரித்திர நிகழ்ச்சி தெளிவாக விளங்குகின்றன. மகம்மதியர்கள் ஆட்சிக் காலச் சரித்திர நிகழ்ச்சிகளும் ஒருவாறு நன்கறியப்படுகின்றன. ஆனால் அதற்கு முன்புள்ள சரித்திர நிகழ்ச்சிகளை யுறுதியாகக் கூறும் நூல்கள் இல்லாமையின் கல் வெட்டு முதலிய சாதனங்களைக் கொண்டே எழுதப்பட்டு வருகின்றன. பண்டைய மன்னர் சரிதங்களை அறிவிற் சிறந்த பெரியார்கள் பலர் தம்மால் இயன்றவரை மிகவும் பாடுபட்டுப் பற்பல கட்டுரைகளாக எழுதியுள்ளனர். அவற்றுள் ஒருகுல அரசர்களில் ஒருவனைப் பற்றிப் பல பெரியார்கள் கூறுவனவற்றையும் தொகுத்து இச்சரித்திரம் எழுதப்படுவதாயிற்று. நாம் சரித்திரத்தைத் தொடங்குவதன்முன் நம் நாட்டின் பண்டைய நிலை, பிரிவு, மக்கள் தன்மை, நாகரிகம், செல்வம், முதலாயினவற்றை நன்கறியவேண்டியது கடமை யாதலின், அவைகளை விளக்கிப் பின் சரிதையில் புகுவாம்.

## 2. ஆரியாவர்த்தம.

"எங்க ளாரிய பூமியெனும் பயிர்
மங்க ளம்பெற நித்தலும் வாழ்விக்கும்
துங்க முற்ற துணைமுகி லேமலர்ச்
செங்க ணய்யின் பதமலர் சிந்திப்பாம்"

(சி. சு. பாரதி).

இக்காலத்தில் நம் நாடு "இந்தியா" என்னும் பெயர் பெற்றுள்ளது. இப் பெயர் யாவரால் இடப்பட்டது என்பதைப்பற்றிச் சற்று சிந்திப்போமாயின் இது பின்காலத்தவர்களால் இடப்பட்ட பெயராகவே இருத்தல் வேண்டுமெனத் தோன்றுகிறது. ஆகார யீற்று சொல்லாகிய 'இந்தியா' என்னும் இப்பெயர் ஸிரியா, பர்ஸியா, ருஷியா, சைபேரியா முதலாயின பெயர்களை ஒத்துளதாதல் நன்கறியலாம். ஆதலின், அந் நாட்டு மக்கள் இந்நாட்டில் வந்து குடியேறிய காலத்தில் இடப்பட்ட பெயராதல் கூடும் என்று புலப்படுகிறது. மேலும் பாரசீகர்கள் (Persians) ஆகார யீற்று சொற்களாகவே தம் நாடுகளுக்குப் பெயர்களிட்டு வழங்கி வருதலால் அவர்களுக்கு அத்தகைய பெயர்களிடுதல் ஒருகால் இயல்பு போலும்! அவர்கள் இந்நாட்டில் புகுந்த பொழுது முதலில் கடக்க வேண்டிய நதி ஸிந்து நதி யாயிற்றாதலின், இந்நாட்டிற்கு இந்தியா என்று பெயரிட்டனர் என்பர் சிலர். சிலர் இந்தியா என்பதற்கு அச்சமுடையவர்கள் வசிக்கும் நாடு என்பது பொருரு

ளெனப் பாரசீகர்கள் கருதினர் என்பர். எவ்வா ருயினும், இக்காலத்தில் இந்தியா என்றே வழங்கப் பட்டு வருகின்றது.

பாரசீகர் குடி யேறி இந்நாட்டிற்கு இந்தியா என்று பெயரிடுதற்கு முன் இந்நாட்டிற் கிருந்த பெயர் யாது என்ற கேள்வி ஒன்றுண்டு. இக்கடாவிற்கும் விடை ஆராய்ந்தே கூறவேண்டி யிருக்கின்றது. இந் நாட்டைப்பற்றிய பிரபலமான விஷயங்கள் யாவும் ஆரியர் இந்நாட்டிற்குப்போந்து குடியேறின பின்பே நிகழப் பெற்றனவாகப் புலனுகின்றன. அவர்கள் வருகைக்கு முன்பிருந்த இந்நாட்டின் நிலைமையினை நன்கறிதற் குரிய தக்க சான்றுகள் கிடைத்தில. ஆத லின் யாவரும் ஆரியர் இந்நாட்டில் வந்து குடி யேறிய பின்னர் நிகழ்ந்தனவற்றையே கூறுவாரு மாயினர். ஆரியர்களோ மத்திய ஆசியாவினின்றும் வந்தோர் ஆவர். அவர்கள் இந்தியாவின் வடமேற்கே யுள்ள இமய மலைக் கணவாய்களின் வழியாய் இந்நாட்டில் பிரவேசித்தனர். அவர்கள் உயர்ந்த சரீரமும், பரந்த நெற்றியும் செந் நிறமும், கூரிய நீண்ட மூக்கும் உடையவர்கள். ஆனிரை மேய்த்தலும் வேளாண்மை யையுமே தம் சீரிய தொழிலெனக் கொண்டவர்கள். அவர்கள் மலைக் கணவாய்களின் வழியாய்க் கூட்டங் கூட்டமாக ஸிந்து நதிக் கரை யோரங்களில் குடி யேறலாயினர். அங்கு ஜனக்கூட்டம் மிகவே பின் கிழக்கு நோக்கி ஸிந்து நதியைக் கடந்து செல்வா ராயினர். அவ்வாறு கடந்து கிழக்கு நோக்கி வந்த அவர்களுக்கு இன்பமும் களிப்பும் ஓங்கிடச் செய்தது

கங்கா ஸிந்து நதிப் பிரதேசம். கங்கையாற்றையும் அதன் உப நதிகளையும், ஸிந்துவின் உபநதிகளையும் கொண்டு திகழ்வதான வளப்பம் மிக்க அப் பூமி அவர்களுக்குத் துறக்க நாடுபோன் றிருந்தது. அத் தகையதான நாட்டில் குடி யேறிய ஆரியர்கள் கொண்ட மகிழ்ச்சி யளவிடற் கரியதாகும். அங்கு அவர்கள் குடி யேறியதும் தங்கள் வாழ்க்கை நிலை யினைத் தக்கவாறு நிலைப்படுத்திக்கொண்டனர். அக் காலங்களிற்றான் இராமாயணம் நிகழப்பெற் றிருத் தல் வேண்டும் என்று கருதப்படுகிறது. வேளாண் மைத் தொழில் சிறப்பாக நடைபெற்று வந்தது. மத்திய ஆசியாவினின்றும் பின்னும் கூட்டங் கூட்ட மாக ஜனங்கள் வரலாயின ராகவே ஆரியர்கள் கூட்டங் கூட்டமாக கிழக்கு நோக்கிச் செல்வா ராயினர். கங்கை, பிரம்மபுத்திரா ஆகிய இரு பெரு நதிகளுக் கிடைப்பட்ட தேசமும், இவைகளைச் சார்ந்த தேசமும் ஆரியர்கள் குடியேறுவதற்குத் தகுந்தவையா யிருந்தன. வளப்பம் பொருந்திய வட விந்தியாவில் கூட்டங் கூட்டமாகப் பிரவேசித்த ஆரியர்கள் தாம் தாம் தங்கிய இடங்களைத் தம்ம கப் படுத்திக்கொண்டு தம்முள் அரசன் ஒருவனைத் தேர்ந்தெடுத்துத் தலைவனுக்கிக்கொண்டு ஆண்டு வர லாயினர். அவர்கள் பேசிவந்தது பிராகிருதம் என் னும் சிதைவுற்ற ஆரிய மொழி. அவர்கள் வட இந்தியாவில் குடி யேறிய பின்னரே ஜாதி பேதங்கள் உண்டாயின. அவர்களுக்குத் தக்க இடம் கிடைத்து விட்டமையின் தம் நிலைமையை மேன்மேலும் விருத்தி செய்துகொள்ள லாயினர்.

ஆரியர்கள் ஸிந்து நதி தீரத்தில் முதலிற் றங்கிப் பின் வட இந்தியா முழுவதையுங் கைப்பற்றிக் கொண்டார்கள் என்பது இதுவரை கூறியவாற்றால் நன்கு விளங்கும். அவர்கள் வட இந்தியாவில் பற்பல கூட்டத்தவர்களாய்ப் பற்பல நாடுகளை ஏற்படுத்திக்கொண்டு நிலைபெறத் தங்கியபொழுது, அவ்வட இந்தியா முழுவதையும் இந்துஸ்தானம் என்ற பெயரால் வழங்குவா ராயினர். வடக்கில் இமய மலையும் கிழக்கில் பர்மாவும், மேற்கில் ஸிந்து நதியும், தெற்கில் விந்திய மலையும் நர்மதையுமாகிய இவற்றிற்குட் பட்டதே இந்துஸ்தானம் என்று அழைக்கப் படுவதாகும். ஆரியர்கள் அப்பொழுது தெற்கு நோக்கி வர முயலாமையின் விந்திய பர்வதத்திற்குத் தென்பாலுள்ள பிரதேசத்தினைத் தக்ஷிணபதம் என்ற ஒரு பெயரால் அழைத்து வந்தனர். கிறிஸ்துவின்பின் ஐந்தாம் நூற்றாண்டில் காசி நகர்க்கு வந்த சீன தேச யாத்திரிகனான பாகியன் என்பானுக்குத் தென் தேசத்தைப் பற்றிக் கூறியவர்கள் "டாடாஸின்" அல்லது 'தக்ஷிணம்' என்றே கூறி யுள்ளனர் என்று தெரிகிறது. ஆரியர்கள் தாங்கள் குடியேறிய நாடாதலின் இந்நாட்டினை ஆரியாவர்த்தம் என்று பெயரிட்டனர். ஆகவே பாரசீகர்களுக்கு முன் இந்நாட்டிற்கு ஆரியாவர்த்தம் என்று பெயர் என்பதே முன் கேட்ட வினாவிற்கு விடையாகும்.

இந்தியாவிற்குப் பாரத நாடு என்றும் ஒரு பெயர் உண்டு. அப்பெயர் ஆரியர்கள் இந்நாட்டிற்கு வந்து குடியேறிய பல் நூற்றாண்டுகளுக்கு பின், ஆரிய அர

சன் ஒருவனால் உண்டான பெயர் என்பது, அதன் வரலாற்றை நோக்குவார்க்கு நன்கு புலனாகும். துஷ்யந்தனுக்கும் சகுந்தலைக்கும் பிறந்தோன் பரதன் என்பவன். அவன் ஆண்ட நாடு ஆதலின் பாரத நாடு எனப்பெயர் பெற்றது என்பது, பாரதத்தால் உணரப் படுவது என்பார் சிலர். மற்றோர், துஷ்யந்தன் மகன் பரதன் அன்று, இக்ஷ்வாகு வம்சத்தில் தோன்றிய பரதன் என்பவனால் ஆளப்பட்டு வந்ததால் பாரத நாடு என்று பெயர் பெற்றது என்பர். எவ்வாறாயினும் இக் கதைகளின் நிகழ்ச்சிகள் ஆரியர் இந்தியாவிற் குடி யேறிய பின்னரே நிகழ்ந்தனவாதலின் ஆரியர்களால் இந்நாட்டிற்கு இடப் பெற்ற பெயர் ஆரியா வர்த்தம் என்பதே யாகும். மற்றும், ஆரியா வர்த்தம் என்னும் பெயர் தான் தகுதியுடையது என்று பல சான்றோர் துணிவுடன் கூறுவா ராயினர். ஹேவல் என்னும் துரைமகனார் இந்தியாவிற்கு ஆரியா வர்த்தம் என்னும் பெயரே தகுதியுடையது என்று கூறியுள்ளனர். ஆரியர்கள் இந்நாட்டிற் குடியேறியதும் இந்நாட்டு மக்களில் மிகத் தாழ்ந்த சிலரை நீக்கி மற்றவர்களோடு கலந்து சம்பந்தம் செய்து கொண்டனர். பழங் குடி மக்களும் ஆரியர்களுடன் கலந்து ஆரியர்களது நடை, உடை, பாவனைகளை அனுஷ்டிப்பவ ரானார்கள். இதே மாதிரியாகத்தான் பின் தென்னாட்டில் ஆரியர்கள் புகுந்த காலத்தில் தென்னாட்டுக் குடிகளும் ஆரிய சம்பந்த முடையவ ரானார்கள்.

வட இந்தியாவில் நிலைபெற்ற ஆரியர்களின் நாகரிகம் நாளுக்கு நாள் மேம்படுவ தாயிற்று. அவர்கள்

கூட்டம்கூட்ட மாக நிலைத்தவர்களாதலால் அவ்வவ் கூட்டத்தார் தத்தமக் கேற்ற நியதிகளை ஏற்படுத்திக் கொண்டு அவைகளுக் கேற்ப ஒழுகி வர லாயினர். அவர்கள் கல்வியை விருத்தி செய்வதில் பெருங் கருத்துடையவர்க ளாயினர். காசி நகரத்தில் சிறந்த கல்விக் கழகம் இருந்தது. அவரவர்களுக்கு ஏற்ப சாதி வகுத்து பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் எனப் பெயரிட்டுக்கொண்டு அவரவர்களுக் குரிய தொழில் முறைகளைச் செவ்வனே புரிந்துவந்தனர். பழங்குடிகளில் பலரும் ஆரியர் நாகரிகத்தைப் பின்பற்ற லாயினர். இக்காலத்தில் அவர் மொழி சீர் திருத்தப்பட்டுச் சம்ஸ்கிருதம் என்னும் பெயருடன் செழித்து விளங்குவதாயிற்று. ருக்கு, யஜுர், சாம, அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும், வேதாங்கங்களும், புராணங்களும், மற்றும் பலநூல்களும் மேம்பாடுற்று விளங்குவ தாயின. ஆரிய மன்னர்கள் பலர் தத்தம் நாடுகளைச் செவ்வனே பரிபாலித்து வந்தனர். இலாடம், கூர்ஜ்ஜரம், காந்தாரம், பாஞ்சாலம், கோசலம், மகதம் முதலிய தேசங்கள் நன்னிலை யெய்தி வலிமைபெற்று விளங்கின. ஆகவே வட இந்தியாவில் பிரவேசித்த ஆரியர்கள் நாளடைவில் வலிமை பெற்று விளங்கினர். பின்னும், மேற்கிலிருந்து ஆரியர்கள் வந்துகொண்டே யிருந்தனர்.

ஆரியர்கள் ஆரியாவர்த்தத்தில் தங்கட்கு வேண்டுவன கிடைப்பதை யறிந்தவர்க ளாயினமையின் அவர்கள் விருப்புடன் வந்து குடியேறலாயினர். அவர்கள் இந்துஸ்தானத்தில் மிக்குப் பெருகியதனல்

அங்கிருந்தும் தக்ஷிணபதம் என்று பெயர் பெற்ற இந்தியாவின் தென் பக்கத்திலும் குடியேற முயன்றனர். அவர்கள், தாங்கள் வட இந்தியாவிற்கு வந்ததுபோலவே கூட்டங் கூட்டமாக வந்து தென் இந்தியாவிலும் குடியேற லானார்கள். அவர்கள் நர்மதை நதிக்கும் கிருஷ்ணா நதிக்கும் இடையிலுள்ள சமநிலத்தைத் தமக்கு வாசத்தலமாக்கிக் கொண்டனர். இவ்விரு நதிகளுக்கும் இடைப்பட்ட பிரதேசம் அவர்களுக்கு மிக்க இன்பத்தை விளைவித்தது. ஸிந்து கங்கா நதிப் பிரதேசம் எத்தகையதாய் அவர்களுக்குத் தோற்றியதோ அது போலவே நர்மதை கிருஷ்ணா நதிப் பிரதேசமும் தோற்றியது. ஆதலின் அவர்கள் தாங்கள் எவ்வாறு ஸிந்து கங்காப் பிரதேசத்தை மதித்துவந்து குடியேறினார்களோ அவ்வாறே நர்மதை கிருஷ்ணாநதிப் பிரதேசத்திலும் வந்து குடியேற லாயினர். தாங்கள் ஸிந்து கங்காப் பிரதேசத்தில் முக்கிய பட்டணமாகப் பிரயாகையை ஏற்படுத்திக் கொண்டவாறே தக்ஷிணத்திலும் பிரதிஷ்டானம் அல்லது பாத்தியனா என்னும் நகரை தமக்கு முக்கிய பட்டணமாக வமைத்துக்கொண்டனர். வட இந்தியாவில் பல தேசங்களை நிறுவியவாறே தக்ஷிணபாகத்திலும் பல நாடுகளை நிறுவினர். அவர்கள் பேசிய பாஷை பிராகிருதமும் மகாராஷ்ட்ரியும், ஆந்தரமும் ஆகும். விதர்ப்ப தேசமாகிய பீஹாரில் வடக்கிலிருந்து வந்த ஆரியர் முதன் முதலில் தங்கிப் பின் பரவலாயினர். அகத்தியர் ஆச்சிரமத் தருகில் பஞ்சவடி என்னுமிடம் இருந்தது என்று கூறப்

படுவதாலும், பஞ்சவடி என்பது நாஸிக் என்னும் இடமே என்று ஆன்றோர்களால் குறிப்பிடப்படுவதாலும், அகஸ்தியர் ஆரியர் ஆதலாலும், ராமன், அகத்தியர் ஆச்சிரமத்தில் தங்கியிருந்ததாகக் கூறப்படுவதாலும், அகத்தியர் தன் வல்லமையில் சிருஷ்டித்த பெண்ணை விதர்ப்ப அரசனுக்கு மணம்செய்து கொடுத்துள்ளார் எனப்படுதலாலும், மச்ச, கூர்ம, வாயு புராணங்களில் நாஸிக் என்னும் இடமே பஞ்சவடி என்பதைத் தெளிவுறவிளக்குதலாலும், சுக்ரீவன் சீதையைத் தேடும்படி வானர வீரர்களை யனுப்பியபொழுது விதர்ப்பம், கலிங்கம் முதலிய தேசங்களிலும் சென்று காணக் கடவர் என்று அவர்களை நோக்கிக் கூறி யிருத்தலினாலும், இராமயண காலத்திற்கு முன்பும், அகத்தியர் காலத்திற்கு முன்பும் ஆரியர்கள் தக்ஷிண பதத்தில் வந்து குடியேறி யிருக்க வேண்டு மென்று புலப்படுகிறது.

சில நூற்றாண்டுகளுக்குப் பின் ஆரியர்கள் தென்னாட்டிலும் பிரவேசித்துத் தமிழ் நாடுகளையும் தம்மகப்படுத்திக் கொண்டனர். ஆரியர்கள் தென்னாட்டில் புகுந்தகாலத்தில் தமிழ் நாட்டில் ஆரியர்களைப் போன்ற உயர்ந்த நாகரிகம் பெற்றிருந்த மக்கள் இருந்தனர். அக்காலத்திலேயே தமிழ்நாட்டோர் கிரீஸ், பாரசீகம் முதலிய தேசங்களுடன் வங்க மேறிச் சென்று வர்த்தகம் செய்து வந்தனர் என்றால் அவர்கள் நாகரிகத்தினை என்னென் றியம்புவது! அவர்கள் அக்காலத்திலேயே செவ்விய தனி மொழியாகிய தமிழ் மொழியைப் பேசி வந்தனர். ஆரியர்கள் தமிழ்

நாட்டிற்குள் புகுந்ததும் தமிழ் நாட்டவரைத் தம் வசப்படுத்திக்கொண்டு அவர்கள் தனிச்செம் மொழியோடு தம்மொழியையும் கலக்கும்படிச் செய்ததுமன்றி அவர்கள் நடை, உடை, பாவனை முதலியனவற்றையும் அறவே மாற்றித் தம்மைப்போ லாக்கிக்கொண்டனர் என்பது மிகையாது. ஆரியர் வடநாட்டிலும் தக்ஷிண பதத்திலும் நகரங்களை ஏற்படுத்திக்கொண்டு அவைகளுக்குத் தம் மொழியிற் பெயர்களிட்டதுபோல் தென்னாட்டிலும் நகரங்களுக்குப் பெயர்கள் இட்டனர். இவ்வாறு, ஆரியர்கள் தாம் குடியேற நினைத்து மத்திய ஆசியாவினின்று புறப்பட்டு இந்தியாவில் வந்து புகுந்த சில நூற்றாண்டுகளுக்குள் இமய மலை முதல் தென் கோடி யீறாக ஆரிய மயமாகச் செய்துகொண்டனர். மத்திய ஆசியாவை விட்டு இந்தியாவில் புகுந்த ஆரியர்கள் நாகரிகத்தில் நாளுக்கு நாள் விருத்தியடைய லானார்கள். இலக்கணங்களும் இலக்கியங்களும், புராணங்களும் தத்துவ நூல்களும், அரசியல்முறை நூல்களும் பெருகலாயின. கல்வி சிர் பெற்றுத் திகழ்வ தாயிற்று. வர்த்தகமும் ஓங்குவதாயிற்று. போர் முறைகளும், வீரர்களின் போர்பயிற்சியும் மேம்பட்டன. அங்கங்கே தங்கி இராஜ்ஜியங்களை யேற்படுத்திக்கொண்ட அரசர்கள் வலிமை பெற்றவர்களாய்ச் செவ்வனே அரசியல் நடத்தி வருவா ராயினர். இவ்வாறு ஆரியர்களின் ஆதிக்கம் இந்தியாவில் செழித் தோங்கி வளர்வ தாயிற்று. இனி நாம் ஐந்து ஆறும் நூற்றாண்டுகளில் இந்தியாவின் நிலையினைச் சற்று ஆராய்ந்து பின் சரிதையிற் புகுவாம்.—

கிறிஸ்துவிற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன் குடியேறிய ஆரியர்களின் நிலைமையை கிறிஸ்துவிற்குப் பின் ஐந்தாவது நூற்றாண்டில் நாம் ஆராயப் புகுந்தால் அவர்கள் நிலை மேம்பட்டதாகவே இருக்குமென்பது நாம் சொல்லாமலே வெளியாகும். கல்வியிலும், செல்வத்திலும், பராக்கிரமத்திலும் அவர்கள் சிறந்து விளங்கினார்கள். அவர்கள் நாடுகள் மேன்மேல் விருத்தி யடைந்து வந்ததால் அவர்கள் ராஜ்ஜியத்தை விஸ்தாரமாக்கிக் கொள்ளவும், கீர்த்தியை அடையவும் முயன்றார்கள். ஆரிய அரசர்கள் ஒருவரோ டொருவர் பொருது நாடு நகரங்களைக் கைப்பற்றிக்கொண்டு வந்தனர். ஆரியர்கள் புகழ்பெற விரும்புந் தன்மையினர். எல்லோரையும் தம் மடிக்கீழ் வைத்தாளவேண்டும் என்ற விருப்ப முடையவர்கள். ஆகவே, வடநாட்டில் விருத்தி யடைந்த ஆரிய மன்னர்களில் சிலர் வலிமை பெற்றிருந்தார்கள். இலாடம், கூர்ஜ்ஜரம், காந்தாரம், மகதம், கோசலம் முதலிய தேசங்கள் வட இந்தியாவில் வலிமை பெற்று விளங்கி யிருந்தன. தக்ஷிணபதத்தில் கலிங்கம், மைசூர், மஹாராஷ்ட்ரம், கொங்காணம் முதலியனவும், தெற்கில் காஞ்சியி லிருந்த பல்லவர்களும், சேர, சோழ, பாண்டிய நாடுகளும் வலிமை பெற்றிருந்தன. வடக்கில் இருந்த அரசர்களுள் ஸ்ரீ ஹாஷன் என்பான் மிகச் சிறந்து விளங்கினன்.

தெற்கில் பல்லவர்கள் வலிமை பெற்றிருந்தனர். பல்லவர்கள், சேர, சோழ பாண்டியர்களைப் பலவாற்றானும் துன்புறுத்தி வந்ததால் சேர

சோழ பாண்டியர்கள் எவ்வாறுவது பல்லவர்களைத் தொலைத்தொழிக்க முயன்று வந்தனர். ஆதலினால் பல்லவர்களுக்கும் தமிழ் நாட்டு மன்னர்களுக்கும் ஓயாப் போர் நிகழ்ந்து வந்தது. தக்ஷிணபாதத்தில் இராட்டிர கூடர்களும், கடம்பர்களும், கொங்கணத்து மௌரியர்களும் தம்முள் சண்டையிட்டு வந்தனர். வடக்கிலிருந்த மகத தேசத்து மன்னனாகிய ஸ்ரீஹர்ஷன் வட இந்தியா முழுவதையும் ஜயித்துக் கொண்டவனாய்த் தென் இந்தியாவையும் தன்னகப்படுத்திக் கொள்ளவேண்டும் என்னும் கருத்துடன் படையெடுத்து வருவானானான். ஆதலால் ஆரியாவர்த்தம் முழுவதிலும் உள்ள ஒவ்வொரு அரசனும் பிறனோடு போர் மலைந்து கொண்டிருந்தனன் என்பது நன்கு புலப்படும்.

ஒவ்வொரு நூற்றாண்டிலும் புதுப் புது படையெழுச்சிகள் உண்டாயின. இலாட தேசமாகிய தென் கூர்ஜ்ஜரத்திலும், அயோத்தியிலும் இருந்த சில ஆரிய அரசர்கள் தாமும் படை யெடுத்து நாடுகளைக் கைப்பற்றிக்கொண்டு வர முயன்றனர். அவ்வாறு முயன்ற படை யெழுச்சியாளர்களுள் சாளுக்கியர் என்பார் ஒரு வகையினர். அவர்களைச் சிலர் இலாட தேசத்து ஆரியர்கள் என்றும், சிலர் அயோத்தியிலிருந்து வந்தவர்கள் என்றும், சிலர் ஆந்திரர் என்றும் கூறுவர். ஆனால் அவர்கள் இலாட தேசத்தவர்கள் என்பதற்கும் அயோத்தியிலிருந்து வந்தவர்கள் என்பதற்கும் கிடைக்கும் ஆதாரங்களைப் போல் சாளுக்கியர் ஆந்திரர் என்பதற்கு ஆதாரங்கள் கிடைத்தில. மற்றும்,

அவர்கள் ஆரியர்களது குணாதிசயங்களையும், நடை, உடை, பாவனைகளையும் பின்பற்றியிருந்தமையின் அவர்கள் ஆரியர்கள் என்றே துணிந்து கூறலாம். அவர்கள் அயோத்தியினின்றும் வந்தவர்கள் என்பதற்குப் பிரபல அத்தாட்சிகள் உள்ளனபோல் இலாட தேசத்திலிருந்து வந்தவர்கள் என்பதற்கு அத்தாட்சிகள் இல்லை. அவர்கள் தக்ஷிணபதத்தில் இராஜ்ஜிய மேற்படுத்திக்கொண்டு வந்தனர். அவர்கள் மகாராஷ்டிரரோடு கலந்து விருத்தி யடைந்தனர். ஆகவே, மகாராஷ்டிர க்ஷத்திரிய வம்சத்தை அவர்கள் சார்ந்தவர்கள் என்பதைப் பின் நாம் நன்கு அறியலாகும். ஆறும் நூற்றாண்டு முதல் எட்டாம் நூற்றாண்டுவரை கீர்த்தி பெற்று விளங்கிய சாளுக்கியர்களில் ஓர் அரசனைப்பற்றிக் கூறுவதே இந்நூலின் முக்கிய விஷயமாகும்.

## 3. சாளுக்கியர்.

தக்ஷிண பதம் என்னும் பெயர் பெற்ற தக்காணத்தில் கிறிஸ்துவிற்குப் பின் 550-க்கு மேல் 574-வரை மேலைச் சாளுக்கியர்கள் சிறந்து விளங்கினர்கள். சாளுக்கியர் என்பார் யார்? எக் குலத்தவர்? எங்கிருந்து வந்தவர்? என்பனவற்றை ஆராய வேண்டியது மிகவும் முக்கிய மானது. சாளுக்கியர், சோளங்கியர், சளிக்கியர், சளுக்கியர் என்பன அவர்கள் பெயர்களாக வழங்கி வந்தன என்று தெரிகிறது. இச் சாளுக்கியரை அக்கினி குல ராஜ புத்திரர் என்று மார்ஸ்டன் துரை மகனர் கருதுகிருர். முதல், இரண்டு நூற்ருண்டுகளில் மத்திய ஆசியாவினின்றும் வந்து கூர்ஜ்ஜரத்தில் குடி யேறியவர்களின் குலத்தினர் சாளுக்கியர் என்பது அவர் கருத்து. ஆனல் சாளுக்கியர்களைப்பற்றிப் புராணங்கள் கூறு மிடத்து அவர்களை அயோத்தியினின்றும் வந்த க்ஷத்திரியர் என்றே கூறுகின்றன. அவர்களோ சந்திர வம்ச ராஜ புத்திரர்க ளென்று கூறிக் கொள்ளுகின்றனர். அவர்கள் பிராம்மண மதத்தை அநுசரித்தவர்கள். அவர்கள் குல தெய்வம் விஷ்ணு. அவர்கள் வைதீக மதத்தவர்களாயினும் ஜைன மதத்தையாவது பௌத்த மதத்தையாவது அழித்துவிட முயன்றவர்கள் அல்லர். ஆயினும் பௌத்த மதம் அவர்கள் ஆட்சிக் காலத்தில் க்ஷீணமடைந்தது. வைதீகப் பிராமண மதம் விசேஷமாய்ப் பரவ லாயிற்று. அவர்கள் ஆட்சிக் காலத்தில் பல கோயில்கள் கட்டப் பட்டன. பல புராணங்கள்

அவர்கள் காலத்தில் எழுதப்பட்டு வெளிப் போந்தன. இவ்வாறு சாளுக்கியர்களைப் பற்றி மார்ஸ்டன் துரை மகனார் கூறுவது நோக்கத் தக்கது.

சாளுக்கியரைப் பற்றித் தெரிந்து கொள்வதற்குப் பல சாஸனங்களும், கல் வெட்டுகளும், செப்புத் தகடுகளும் கிடைத் துள்ளன. சாளுக்கியர் என்பவர்களின் வரலாற்றைப் பில்ஹண கவி கூறுவதும் நோக்கத் தக்கது. அதாவது ஒரு சமயம் பிரம்ம தேவர் தம் காலைக் கடன்களை நிறை வேற்றிக்கொண் டிருந்தார். அத் தருணத்தில் அவரிடத்தில் தேவேந்திரன் வந்தான். தேவேந்திரன் பிரம்ம தேவரை நமஸ்கரித்து வணங்கி நின்று, "தேவரே! தேவர்களாகிய நாங்கள் படு துயரை என் என்று கூறுவோம். பூவுலகில் புண்ணியங் குன்றிப் பாவங்கள் மலிந்து விட்டன. ஆதலின் ஒருவரும் வைதீக கருமங்களைச் சரிவர நடத்துவதில்லை. ஆதலின் எங்களுக்குப் பெரிதும் இடர்ப்பா டுண்டாகின்றன" என்று முறையிட்டான். தேவராஜனின் முறைப் பாட்டைக் கேட்ட பிரம்ம தேவர் சளுகமாகிய தம் முள்ளங் கையில் நீரை யெடுத்து மந்திரித்து விடுத்தனர். அப்பொழுது ஒரு வீரன் தோன்றினன். அவன் தான் சாளுக்கியர் குலத்திற்கு முதற் காரண மானவன். கொஞ்ச காலத்திற்குப் பிறகு அவன் வம்சத்தில் இருவர் தோன்றினர். அவர்கள் முறையே ஹாரீதர், மாணவியர் என்னும் பெயர்களைக் கொண்டவர்கள். அவர்கள் தம் குலத்தை மிகவும் விளங்கச் செய்தனர். அவர்க ளிருந்த இடம் அயோத்தி. சில காலத்திற்

குள் அவ் வம்சத்தினர் தென்னாட்டிலும் வந்து தங்க லாயினர். அவர்கள் முருகக் கடவுளின் திருவருள் பெற்றவர்கள். ஹாரீதர், மாணவியர் என்னும் இரு வர் மூலமாகத் தோன்றிய சாளுக்கியர் அவ் விருவர் பெயர்களையும் தங்கள் கோத்திரப் பெயர்களாகக் கொண்டனர். ஏலூர்ச் சாஸனங்களும் மீருஜ் சாஸ னங்களும் சாளுக்கியர் அயோத்தியி னின்றும் வந்த வர்கள் என்று பில்ஹணர் கூறியதை நிலை நாட்டு கின்றன. சாளுக்கியர்கள் ஸ்ரீ நாராயணன் திருவரு ளால் வராகத்தின் உருவம் தீட்டப் பெற்ற ஆயுதம் ஒன்றைப் பெற்றவர்களாய் அதனைக் கொண்டு பல மன்னர்களை ஜெயித்து வந்தனர் என்று கூறப்படு கிறது. இது போலவே அவர்கள் வம்சத்தைப் பற்றிக் கூறும் மற்றோர் கதையு முண்டு. அக் கதையும் சாளுக்கியர்கள் அயோத்தியினின்றும் வந்தவர்க ளென்பதையே நிலை நாட்டுவ தாகும்.

மேற்கூறியது பில்ஹண கவியால் புனைந்து கூறிய தென்று கருதற்கு மிடனுகின்றது. மேலைச் சாளுக்கி யர் வம்சம் பௌராணிகமா யிருப்பதுபோல் கீழைச் சாளுக்கியர் வம்சமும் பௌராணிகமாக வில்லாதது மன்றிக் கல்வெட்டுச் சாசனத்தால் வம்சாவளி நன்கு விளங்குவதாகவும் இருக்கிறது. விமலாதித்தன் சாஸ னத்தில் வருவதாவது: முதலில் சந்திரன் தொடங்கி அவ் வம்சத்தில் பாண்டவர்கள் வரையிலு முள்ள அர சர் குல முறைகளைக் கூறிப் பாண்டவர் முதல் உத யணன் வரையிலு முள்ள அரசர் குல முறைகளையும் கிளந்து, பின், ஒருகதையினையும் கூறுகின்றது. அதா

வது:—"ஐம்பத் தொன்பது அரசர்களுக்குப் பின் அவர்கள் வழித் தோன்றலான விஜயாதித்தன் என்பவன் ஆண்டு வந்தான். அவன் தக்ஷிணபதத்தைக் கைப்பற்றிக் கொள்ள விருப்பங் கொண்டான். அவ்வாறு விழைந்தவன் படைகளைத் திரட்டிக்கொண்டு தக்காணத்தை எதிர்க்க லானன். அக் காலத்தில் தக்காணத்தையாண்டு கொண் டிருந்த பல்லவர்களில் திரிலோசன பல்லவன் என்பான் விஜயாதித்தனைத் தடுத்தான். திரிலோசனன் மிக்க பராக்ரம சாலி. போரிற் பழகிய திரண்ட சேனையை உடையவன். விஜயாதித்தன் திரிலோசன பல்லவனை எதிர்த்துப் பொருது ஜயித்தே தக்காணத்தில் புக வேண்டியதாயிற்று. ஆதலின் அவ் விருவருக்கும் போர் நடந்தது. போரில் விஜயாதித்தன் கொல்லப்பட்டான். அவனுடன் சென்றிருந்த அவன் மனைவி அக்காலத்தில் வயிறு வாய்த்திருந்தாள். கர்ப்பிணியான அவ்வரசி ஓர் அந்தணனல் அவன் இல்லத்திற்கு அன்போடு அழைத்துக்கொண்டு போகப்பட்டாள். அவ் வந்தணன் பெயர் விஷ்ணு பட்ட ஸோமயாஜி என்பதாகும். அந்தணனல் ஆதரிக்கப்பட்ட அவ்வரசி ஓர் அரசிளங் குமரனை ஈன்ருள். அவ் வரசிளங் குமரனுக்கு விஷ்ணு வர்த்தனன் என்று திருநாமம் இட்டு மானவிய கோத்திரத்தில் ஹாரீதி புத்திரனை சுத்த க்ஷத்திரியனுக்குரிய விதிப்படிச் செய்யவேண்டுவன வற்றை விஷ்ணு பட்ட சோமயாஜி செய்து முடித்தனன். அவ் வந்தணன் அரசியையுங் குழந்தையையும் செவ்வையாகக் கவனித்து வந்தான். அரச குமர

னுக்குத் தக்க பருவம் வந்ததும் கல்வி பயிற்றுவித்து வந்தனன். விஷ்ணு வர்த்தனன் கல்வியிற் றேர்ந்தவனாய் இளவரசனானபொழுது தன் குலச் சரிதையை அறிந்து கொண்டான். குலச் சரிதையை யுணர்ந்த விஷ்ணு வர்த்தனன் தன் குலத்தைத் தான் மேனிலைக்குக் கொணர்தல் வேண்டுமென வுணர்ந்து சாளுக்கிய மலையை யடைந்து ஆங்குக் கௌரியையும், முருகனையும், நாராயணனையும் தொழுது தவமியற்றுவா னாயினன். அம் முத்தேவர்களின் திருவருளால் வெண்குடை, ஏக சங்கம், மகர தோரணம், ஐம் மணிகள் தூங்கிய சிம்மாசனம், கனக தண்டம், ஐவகை இசை முழக்கம், பாளி பாஷையில் குல முறை விளக்கங் காட்டுங் கொடி, பேரி வாத்தியம், வராக முத்திரை, கங்கை யமுனை வம்ச விளக்கக் குறிகள் (சுவேத சத்ர, சங்கு, சாமர, கனக தண்ட, பஞ்ச கண்ட சிம்மாசன, வராக லாஞ்சன, பாலிகேதன, பேரி, டக்கா, சமேத கங்கா யமுனா வம்சோத்பத்தி காரண சின்னங்கள்) முதலியன தன் குலத்திற் குரியன என்பதை யுணர்ந்து விஷ்ணு வர்த்தனன் பெற்றுக்கொண்டான். அவன் பின் தன் வல்லமையால் கடம்பர்களையும், கங்கர்களையும், மற்று முள்ளாரையும் போரில் எதிர்த்துத் தோற்றோடும்படிச் செய்து தக்ஷிண பதம் முழுவதையும் ஜயித்துக்கொண்டான். அவன் ஆட்சியில் ஏழரை லட்சம் ஊர்க ளிருந்தன. சேது முதல் நர்மதைவரை அவன் நாடாயிற்று.

விஷ்ணு வர்த்தனன் ஒரு பல்லவ அரசன் மகளை மணந்துகொண்டான். அவளிடமாக அவனுக்கு

ஓராண் குழந்தை பிறந்தது. அக் குழந்தைக்கு விஜயா தித்தன் என்றுபெயர். அவன் பெரியவனுகி மணந்து ஒரு புதல்வனைப் பெற்றெடுத்தான். அப் பிள்ளையின் பெயர் புல்லகேசி வல்லபன். அவன் மைந்தன் பெயர் கீர்த்திவர்மன்.'' என்று இம்மட்டில் மேலைச் சாளுக்கியர் குல முறையைக் கிளந்து பின் கீழைச் சாளுக்கியரைப் பற்றிக் கூறுகின்றது. இதில் விஜ யாதித்தன் என்பான் சந்திர வம்சத்தில் உதித்து உதயணனுக்குப் பின் ஐம்பத்தொன்பதாவது அரச னய்த் தோன்றினன் என்பது பெறப்படுகின்றது. உதயணன் என்பான் கி. மு. 600 வது ஆண்டாகக் கொண்டால் ஒவ்வொரு அரசனுக்கும் இருபது ஆண்களாகக் கணக்கிட்டு விஜயாதித்தன் உதயணனுக் குப் பின் 1180 ஆண்டுகள் கழித்து வந்தவன் என்பது பெறப்படும். அதாவது, கி. பி. 580 ஆகும். இவ் வகையில் சற்றேறக் குறைய நூறுண்டுகள் வித்தியா சம் ஏற்படுதற்கு இட முண்டாயினும் ஐம்பத்தொன் பது தலைமுறைகள் கழிந்திருத்தலால் ஒருவாறு ஏற்றுக்கொள்வதற்கு மிடமுண்டு. மற்றும், சாஸன ஆராய்ச்சிக்கும் பொருத்த முடையதாகின்றது என்று சரித்திர வாசிரியர் C. V. வயித்தியா என்பவர் எழுதுகிறுர்.

மேற்கூறப்பட்ட மூவகையான கூற்றுக்களையும் ஆராய்ந்து பார்த்தால் சாளுக்கியர்கள் மகாராஷ்டிர க்ஷத்திரிய வம்சத்தில் மாணவ்விய கோத்திரத்தவர் கள் என்று கூறுவது ஒருவாறு பொருந்தும். ஹாரீத புத்திரர் என்பது ஆராயப்படுகையில், ஹாரீத வம்ச

அரசியினிடத்தில் மாணவ்விய கோத்திர அரசனுக் குப்பிறந்த பிள்ளை என்பது கல்வெட்டினுல் நன்கறியப் படுகிறது. ஆகவே சாளுக்கியர் அயோத்தியிலிருந்து வந்தவர்களாகவே கொள்ளுதல் சிறப்புடைத் தாகு வது மன்றிச் சரித்திர ஆராய்ச்சிக்கும் ஒத்திருப்ப தாகும்.

இச்சாளுக்கிய வம்சத்தில் முதல் அரசனுக ஆக்கப்பட்டவன் ஜயஸிம்மன் என்பவ னுவன். அவன் இராஷ்டிர கூடர்களைப் போரில் வென்று தன் னடிப் படுத்திக்கொண்டு அரசனுனன் என்று தெரி கிறது. அவன் காலத்தில் போர்கள் பல நிகழ்ந்தன. அப்போர்களி லெல்லாம் வெற்றி பெற்றவனுய் விளங் கியதோடு பகைவர்கள் நாடுகளுக்கு அதிபதியு மானுன். அவன் மகன் இரணராகன் என்பவன் ஆவன். ஜயஸிம்மனுக்குப் பின் இரணராகன் அரச னுனன். அவன் பராக்கிரமும் பெருந் தோற்றமு முடையவன். அவன் ஆட்சிக்குப் பின் அவனுடைய மகன் புலிகேசி என்பவன் அரசனுனன். அவன்தான் முதலாவது புலிகேசி எனப்படுபவன். அவன்தான் சாளுக்கியர் குலத்தைத் தக்காணத்தில் நிலை நாட்டிய தீரன். அவன் கீர்த்தியும் பராக்கிரமும் வாய்ந்தவன். மகாராஷ்டிர ராஜ்ஜியத்தை நிலை நிறுத்தித் தன்னு டைய தாக்கிக்கொண்டவன் அவனே. அவன் வாதா பிபுரம் (Badami in Kaladgi District) என்பதைத் தனக்குத் தலைநகராகக் கொண்டான். புலிகேசி முத லாவானுகிய அவன் கி. பி. 550-ல் துர்லாப தேவி என்பவளை மணந்துகொண்டான். அவன் ஒரு அசுவ

மேத யாகம் இயற்றினன். அவனது கீர்த்தி விளங்க அவனைச் சத்தியாசிரிய ஸ்ரீ புலிகேசி வல்லப மகாராஜன் என்று அழைப்ப தாயினர். அவன் வழித் தோன்றல்களுக்கும் வல்லபன் என்ற பட்டப் பெயர் பின் காலத்தில் நிலை பெற்று நின்று வழங்குவ தாயிற்று. அவன் பின் தோன்றியவர்களின் பெயர் கள் முன் சில இடங்களில் பிரதிவீ வல்லபன் என்ற பட்டப் பெயரும் காணப்படுகின்றன. சத்தியாசிர யன் என்பது (சத்தியத்தை) உண்மையை ஆதரிப் பவன் என்ற பொருளைத் தருவதாகும். இப் பெயர் பின் சந்ததியார்களுக்கும் நிலைபெற்று வழங்கி வரும் படிச் செய்தவன் அவனே என்றும், அச் சாளுக்கியர் குடும்பத்திற்கு மூல புருஷன் அவனே என்றும் கூறு வது மிகையாகாது. அவன் காலத்தில் அவனது பட்டப் பெயரைக் கேட்ட அன்னிய நாட்டாரும் அப் பட்டப் பெயரைத் தாமும் வைத்துக்கொள்ள விழைந்து 'ஸ்ரீயாசிரியன்' 'ஜனாசிரியன்' என்ற பட் டப்பெயர்களை வைத்துக்கொண்டனர் என்று தெரி கிறது. அத்தகைய அரசன் கி. பி. 567-ல் இறந்தான்.

புலிகேசி இறந்த பின் அவன் மகன் கீர்த்தி வர்மன் அரச னானான். கீர்த்தி வர்மன் அரச னானதும் மாளவ தேசத்தவர்களைத் தோற்கடித் தான் என்று தெரிகிறது. பின், வட கொங்கா ணத்து மௌரியர்களையும், வட கன்னடத்துக் கடம் பர்களையும் போரில் வென்றான். அவன் அரியணை யேறியது கி. பி. 567-வது ஆண்டி லாகும். அவனுக்கு மூன்று புத்திரர்கள் இருந்தனர். அவர்கள் முறையே

புலிகேசி, விஷ்ணு வர்த்தனன், ஜயஸிம்மன் எனப் படுவோ ராவர். அவர்களுள் முதல் புதல்வனான புலி கேசியே நம் நூலுக்குத் தலைவனாவன். இரண்டா வது புத்திரனான விஷ்ணுவர்த்தனன் கீழைச் சாளுக் கிய வம்சத்தை வேங்கியில் நிலை நாட்டிய குப்ஜ விஷ்ணு வர்த்தனன் ஆவன். ஜய ஸிம்மன் என் போன் கூர்ஜ்ஜரத்தில் இரண்டாவது வம்சத்தை நிறு வினவன் ஆவன். உலகில் நன்கு விளங்கும் உயர்ந்த குடும்பத்திற்குச் சில காலங்களில் இடையிடையே தீங்கு வருவ துண்டு. அவ்வாறு தீங்கு வருதல் அக் குடும்பத்தின் மேன்மையையும் விருத்தியையும் பின் காலத்தில் விளக்கிக் காட்டுவதற்கே யாகும். கீர்த்தி வர்மன் கி. பி. 591-ல் இறந்தான். அவன் இறக்கும் பொழுது அம் மூவரும் இளையராய் இருந்தனர். கீர்த் திவர்மனுக்கு ஒரு சகோதர னுண்டு. அவன் பெயர் மங்கலீசன். தமையன் இறந்ததும் தான் அவ் வர சாட்சியைப் பெறவேண்டு மென்று, தன் சூழ்ச்சி யாலும் வல்லமையாலும் முயன்று கைப்பற்றிக் கொண்டான். அரச குமாரர்களான புலிகேசி, விஷ்ணு வர்த்தனன், ஜயஸிம்மன் ஆகிய மூவரும் ஆண்டில் மிக்க இளையராய் இருந்தபடியினால் மங்க லீசன் ஆதரவில் இருக்க வேண்டியவர்கள் ஆனார் கள். அந்தோ! செல்வம் மிகக் கொடிது! செல் வம் படைத்தவர்கள் தங்கள் புத்திரர்களை இள மையான பருவத்தில் விட்டுவிட்டு விண்ணுலக வாழ்க் கையை யெய்துவராயின், பின் அவ் விளங்குழந்தை களைக் காப்பாற்ற வரும் அப் பிள்ளைகளின் சிற்றப்பன்,

பெரியப்பன் முறையுள்ளோர்கள் சில காலத்திற்குள் நல்லவர்களாய் இருந்தோர் தீயவர்களாக மாறித் தீயனவு மிழைத்தலை இம் மலர்தலையுலகில் கண்கூடா கக் காண்கின்றோம். அரச குடும்பங்களாயின் கேட் கவும் வேண்டுமோ?

## 4. சிற்றப்பன் சூழ்ச்சி

கீர்த்தி வர்மன் இறந்ததும் மங்கலீசன் கி.பி. 571-ல் அரசாட்சியைப் பெற்றான். முதலாவது புலிகேசியினலும் கீர்த்திவர்மனலும் சாளுக்கிய ராட்சி நிலை பெறும்படிச் செய்துவைத்துப் போன துறைகளெல்லாம் மங்கலீசன் காலத்தில் அவனுக்குப் பெரும்பயன் அளிப்பன வாயின. சேனைகள் போரில் பழக்க முற்றனவாக இருந்தன. ஆதலின், மங்கலீசன் அரசாட்சியை ஏற்றுக்கொண்டதும் தமையனைப் போலவும், தந்தையைப் போலவும் தன்னாட்டை விஸ்தாரப் படுத்திக்கொள்ள எண்ணினன். தமையனைப் போலவும் தந்தையைப் போலவும் தானும் மாற்றாரோடு போர் புரிந்து வாகை சூட வேண்டுமென்னும் விருப்புடையவனுமாயினன். தான், பக்கலிலுள்ள அரசர்களைப் போரில் வென்று அவர்கள் இராஜ்ஜியத்தைக் கைப்பற்றிக் கொண்டால் பேரரசன் ஆவதோடு தன் வலிமையால் தமையன் மைந்தனுக்கு முறைப்படி யளிக்க வேண்டிய இராஜ்யத்தை அளிக்காமல் இருப்பதற்கும் தக்க நிலைமையும், காரணமும் ஏற்படும் என்றும் எண்ணினன். தமையன் மைந்தர்களைக் காப்பாற்றி வந்தாலும் மங்கலீசன் மனத்தில் நிறைந்த அன்பு அவர்கள்பா லில்லை யென்பதை அவனது ஒரு சில செயல்கள் விளக்காமற் போகவில்லை.

இத்தகைய நிலையில் காலசூரி ராஜ புத்திரர்கள் சேதி ராஜ்ஜியத்தை யாண்டு வந்தனர். அவர்களுக்குத் தலைநகர் திரிபுரம் என்பதாகும். அது ஜபல்

பூருக்கு அருகாமையில் உள்ளது. அவர்கள் வீரத்தில் நிறைந்தவர்கள். அவர்களும் தங்கள் நாட்டைப் பரவச் செய்யவேண்டு மென்ற எண்ணமுடையவர்களா யிருந்தனர். அவர்களுக்கும் சாளுக்கியர்களுக்கும் விரோத முண்டு. அதனால் அவர்கள் எப்பொழுது சாளுக்கியர்கள் பலவீன முற்றிருப்பார்கள் என்பதையே நாடிக்கொண் டிருப்பவர்க ளானார்கள். மங்கலீசனும் அவர்களை எவ்வாறாவது வென்று அவர்களுடைய இராஜ்யத்தைத் தன்னுடைய தாக்கிக்கொள்ள வேண்டும் என்று எண்ணிக்கொண்டிருந்தான். அவ்வெண்ணம் அவன் மனத்தில் நெடுங்காலமாக வவ்வப் போது தோன்றி மறைவ துண்டு. பலகாலும் மனத்தில் தோன்றி மறையும் ஒரு எண்ணம் எக் காலத்திலாவது ஒரு சமயம் வெற்றியை யடைந்தே தீரும். அதுபோல மங்கலீசன் மனத்தில் காலசூரி ராஜ புத்திரர்களை போரில் வென்று அவர்கள் நாட்டைத் தான் கைப்பற்றிக்கொள்ள வேண்டு மென்று பலகாலும் தோன்றி மறைந்த எண்ணம் அப்பொழுது கரும நிலையில் வந்து வெற்றி பெறுவதுமாயிற்று. தன்னிடத்தில் போரிற் பழகிய திரண்ட படைகள் இருப்பதை யுணர்ந்து மங்கலீசன் காலசூரி ராஜ புத்திரர்கள் மீது படை யெடுக்க முயன்றான் என்பது ஒரு வியப்பல்ல. காலசூரி இராஜ புத்திரர்களும் தங்கள்மீது மங்கலீசன் படையெடுத்து வரப் போகின்றான் என்பதை யுணர்ந்தார்கள். அவ்வாறு மங்கலீசன் படையெடுத்து வருகின்றான் என்று கேள்விப் பட்டசெய்தி காலசூரி ராஜ புத்திரர்களுக்கு

அச்சத்தையேனும் வியப்பையேனும் உண்டாக்க வில்லை. மங்கலீசன் படை எப்பொழுது தம்மை வந்து தாக்கினும் அப்பொழுது அவர்களை எதிர்த்துப் போராடுவதற்கு அவர்கள் தயாராகவே யிருந்தனர் என்பது சொல்லவும் வேண்டுமோ? மங்கலீசன் சேனைகளை யெல்லாம் திரட்டிக்கொண்டு காலசூரிகளைப் போரிற் கொன்று வெற்றி பெறும் பொருட்டு வாதாபி நகரை விட்டு வெட்சி சூடி விரைந்து சென்று திரிபுரத்தைச் சுற்றி நின்று முற்றுகை யிட்டான். மங்கலீசன் முற்றுகை யிட்டதை யுணர்ந்த காலசூரி இராஜ புத்திரரும் அஞ்சாது போர் புரிய வெளிப் போந்தனர்.

மங்கலீசன் தேர்ச்சி பெற யுத்த வீரர்களைக் கொண்டு கடும்போர் புரியத் தொடங்கினான். வீரர்கள் திறமையுடன் மங்கலீசனால் நடத்தப் படுவதால் வீரத்தோடும் பகைவர்களை எதிர்த்துப் போர் புரிய லானார்கள். காலசூரி ராஜ புத்திரர்களும் சிறிதும் அஞ்சாது பகைவர்களை எதிர்த்து அவர்கள் முற்றுகையை யழிக்க முயன்றார்கள். இரு திறத்தாரும் போர் புரிந்ததை நோக்கினவர்கள், இராம ராவண யுத்தமோ என ஐயுற்றனர். நாட்கள் பல கழிந்தன. காலசூரி ராஜ புத்திரர்களின் சேனை பலம் குறைந்து கொண்டே வந்தது. தங்கள் சேனை பலம் குறை வுறுவதை நன்கறிந்தார்களேனும் மங்கலீசனுக்குக் கீழ்ப் படிந்து நடக்க அவர்கள் மனம் இடங் கொடுக்க வில்லை. ஆதலின் தம்மால் இயன்றவரை பகைவர்களை எதிர்த்துப் போராடி

அவர்களை முறியடித்து ஒட்டி விடவே முயன்றனர். சாளுக்கிய வீரர்களும் திறமையுடன் பொருதனர். முடிவில் மங்கலீசன் வெற்றி பெற்றான். சேதி நாடு மங்கலீசன் கையகப் பட்டது. அதனால் அவன் மிக்க களிப்புடன் திரிபுரத்தை விட்டு வாதாபியை நோக்கி வெற்றிமுழக்கத்தோடு திரும்பி வந்தான். அவன் வெற்றியோடு வருவதை யறிந்த வாதாபி நகரத்தோர் சந்தோஷ மடைந்தனர். ஒவ்வொரு வரும் தன் அரசனுக் குண்டாய வெற்றியை தமக் குண்டாய தென்று எண்ணிக் களித்தனர். மங்க லீசனை அந் நகர மாந்தர் அனைவரும் அன்புடன் எதிர்கொண் டழைத்து வரவேற்றனர். மங்கலீசன் சூதா குலத்தோடு மத கயம் போல நகர் வந்தடைந் தான். அன்று அந் நகரம் முழுவதும் களிப் பென் னுங் கடலுள் ஆழ்ந்திருந்தது.

மங்கலீசன் காலசூரி ராஜ புத்திரர்களைப் போரில் வெற்றி கொண்டதும் அவன் நாடு மேம்பட்டு விளங் குவ தாயிற்று. மற்றைய பகை யரசர்கள் மங்க லீசனை எதிர்க்க அஞ்சினர். தக்காணத்தில் சிறந்த நிலையை மங்கலீசன் அடைந்ததற்கு அவன் காலசூரி ராஜ புத்திரர்களை போரில் வென்றதே காரண மாயிற்று. மங்கலீசன் தன் நாட்டைச் சிறப்பாக ஆண்டுவந்தான். அவன் அந் நாட்டு அரசுரிமை தனக்குரிய தென்றே எண்ணங் கொண்டவனு னன். தனக்குப் பின் தன் மைந்தனுக்கே அவ் வரசுரிமை கொடுக்கத் தகுந்தது என்று எண்ணு வானுமானான். தன் தமையன் மைந்தன் ஆண்டில்

இளையனை யிருத்தலின் ஆண்டு வருவதை அவன் அறவே மறந்தனன். அந் நாட்டு அரசுரிமை கீர்த்திவர்மனின் முதற் புதல்வனான புலிகேசி என்பானுக்குச் சொந்த மானது என்பது அவன் மனத்தில் தோன்றவேயில்லை. தான் வெற்றி யுடையோனாயிருத்தலினாலும் ஜனங்கள் தன் மேல் நேசங் காட்டி வருதலானும் தன் நிலையை மங்கலீசன் மறந்திருந்தான் என்பது உண்மை. கீர்த்தி வர்மனது மைந்தர்கள் நாளுக்கு நாள் கல்வியிலும் உயுத்தப் பயிற்சியிலும் சிறந்து விளங்கினர். அது அவனுக்கு அருவருப்பைத் தந்தது. அவன் மனத்தில் தீய எண்ணங்கள் தோன்றுவ தாயின. மங்கலீசன் தன் மைந்தன் இராஜ்ஜியத்தை அடைதற்குரிய வழிகளைத் தேடவேண்டும் என்று முயன்று வந்தான். ஆனால் அவன் வெளிப்படையாக ஒன்றும் புரிய இயலாதவனானன். அவனுக்குக் கீர்த்தி வர்மன் மைந்தர்களைக் காணுந் தோறும் பொறாமையும், கோபமும், அருவருப்பும் உண்டாயின.

மங்கலீசன் கொண்டிருக்கும் கள்ளச் சிந்தை புலிகேசிக்குத் தோன்றாமற் போகவில்லை. தன் சிற்றப்பனே தன் அரசுரிமைக்குத் தடையாய் நிற்கின்றான் என்பதைச் சில ஆண்டுகளுக்குள் புலிகேசி நன்கறிந்து கொண்டான். ஆதலின் தான் தன் தம்பிமார்களான விஷ்ணு வர்த்தனன் ஜயஸிம்மன் இருவரையும் அழைத்து மங்கலீசன் கொண்டுள்ள கருத்தை அவர்களுக்கு எடுத்துக் கூறி மிகவும் ஜாக்கிரதையாக இருக்கும்படி எச்சரிக்கை செய்து வைத்தான். செல்வவங்

தர்கள் வீட்டில் இளங் குழந்தைகளை விட்டுவிட்டுத் தாய் தந்தையர்கள் இறந்து விடுதலும், அவர்கள் இறக்கவே அக் குழந்தைகளைப் பராமரிக்க வந்த உற வினரோ, மற்றவரோ அக்குழந்தைகள் பெரியோர்க ளாகும்வரை அவர்கட்குரிய செல்வத்தைத் தாம் அனுபவித்து வருதலும், அக் குழந்தைகள் தக்க பருவத்தை யடைந்து தம் உரிமையைத் தமக்கு வழ ங்கவேண்டு மெனக் கேட்குங் காலத்தில் தாம் முன் பின் எதிர்பாராத நிலையில் தமக்கு இடையில் வந்த அச் செல்வத்தைத் தம் மனம்போன போக்காக அனுபவித்த அப் பரிபாலகர்கள் கொடுக்க மன மற் றவர்களாய்க் குழந்தைகளின் உரிமையை மறுத்து விடுதலும் இவ் வுலகில் இயல்பாக நடைபெறுதலை நாம் காண்கிறோம். அம்மட்டோ! அம்மம்ம! சிலர் அக் குழந்தைகளை அந்தகன் உலகிற்கு அனுப்புவதை யும் இவ்வுலகம் கண்ணுற் றிருக்கின்றது. அவ்வாறு உலகியல் இருக்குங் காலத்தில் மங்கலீசன் தன் தமையன் மைந்தர்களுக் குரிய இராஜ்ஜியத்தைத் தான் கவர்ந்து தன் மைந்தனுக்கு நிலைநாட்டவேண்டு மென்று நினைத்ததும், அண்ணன் மைந்தர்களுக்கு இடையூறுகள் பல இயற்றியதும் அற்புதமன் றல் லவா? மங்கலீசனும் உலக வாழ்க்கையில் ஈடுபட்ட வனே யன்றோ!

மங்கலீசன் எப்பொழுதும் இராஜ்ஜியத்தைக் கவர்ந்து தன்மைந்தனுக்கு உரிமைப் படுத்தவேண்டு மென்ற கொள்கையிலேயே தன் சிந்தனையைச் செலுத் திக் காலத்தைச் செலவிட்டு வந்தான். அதற்காக

அவனுக்குப் பல துணைவர்கள் வேண்டியதாயிற்று. அவர்களோ அவனிடத்தில் அந்தரங்க விசுவாச முடையவர்களாக இருக்கவேண்டும். உலகில் தீவினை புரிவார்களுக்குச் சிலர் உற்ற துணைவர்களாக இருந்து உதவி புரிவதுண்டு. அத் துணைவர்கள் உண்மையானவர்களைப் போல் தம் காரியமாகுமளவும் நடித்து வருவது வழக்கம். அவர்கள் தமக்குப் பொருள் கிடைக்குமளவும் உண்மையான உதவி புரிவார்களை ஒப்ப நடிப்பார்கள். தமக்குரிய பணம் கிடைக்காமற் போயினும், தாம் துணை புரியும் காரியம் தோல்வியுறும் என்று தோன்றினும் விரைவில் அவர்கள் அகன்றொழிவார்கள். அவர்கள் துணையையே தன் வலியாகக் கொண்டு ஒரு கருமத்தில் இறங்கியவன் தக்க தருணத்தில் அவர்கள் தன்னைத் துறந்து சென்றதால் 'மண் குதிரையை நம்பி ஆற்றில் இறங்கிய கதை' யாகத் தோல்வி யுறுவது மன்றிப் பிறர் பழிப்புக்காளாகியும், சில சமயங்களில் தம் வாணாள் முடிவையடைதலும் உண்டு. ஆதலின், தீவினை புரிபவர்களுக்குத் துணைவர்கள் ஏற்படுதலும், அவர்கள் இடையில் நீங்குதலும், அதனால் முடிவில் தீவினை புரிவோர் துன்புறுதலும் உலக வியற்கை. மங்கலீசனுக்குத் துணைவர்கள் நாளடைவில் ஏற்பட்டனர்.

புலிகேசி தக்க பருவ மடைந்ததைக் கண்டு மங்கலீசன் வெறுத்தான் என்று கூறவும் வேண்டுமோ? தன் துணையாளர்களோடு கலந்து தன் கருத்தை நிறைவேற்றுவதற்கு அவன் மனம் விழைந்தது. மங்கலீசன் அரசனானதால் அவனுக்கு முராணி நடந்

தால் அவன் துன்புறுத்துவானே என்று அஞ்சிச் சிலர் அவன்பா லடைந்து துணை புரிபவர்கள் போல் நடித்தனர். பொருள் நசை யுள்ளார் சிலர் 'காற் றுள்ள போதே தூற்றிக் கொள்ள வேண்டும்' மென நினைத்து அவனைச் சார்ந்தனர். அரசாங்கத்தில் உயர்ந்த உத்தியோகத்தையும், பெரு மதிப்பையும் விழைந்த சிலர் அவனுக்குத் துணைவ ராயினர். அத் தகையார் எல்லோரும் சேர்ந்து அவன் கருத்தை நிறைவேற்றி வைப்பதாகக் கூறி அவன்பால் நட்புக் காட்டினர். மங்கலீசன் தனக்குற்ற துணைவர்களின் உதவியால் தான் கொண்ட கருத்தினை நிறைவேற்றி விடலாம் என்ற உறுதியையும் அவர்கள் வாய்மொழி களைக் கேட்டு மனத்தில் கொண்டான். அவர்கள் அனைவரும் ஒருங்கு கூடி எவ்வாறு அரசுரிமையை மங்கலீசன் மைந்தனுக்கு நிலைக்கச் செய்வது எனச் சிந்திக்கலாயினர். முதன் முதலில் குடிகளுக்கு மங்கலீசன் பேரிலும் அவன் மைந்தன் பேரிலும் அபிமான முண்டாகும்படிச் செய்து, பின், அவர் களுக்கு ஊட்டும் போதனையால் அவர்களையே தங்க ளுக்கு அரசனாக மங்கலீசனுக்குப் பின் அவன் மைந்தனே வரவேண்டும் என்று கூறும்படிச் செய் தல் நாட்டில் குழப்ப மில்லாமலும், தம் மீது பழி யில்லாமலும், செய்து கொள்ளக் கூடிய தக்க சூழ்ச்சி யென்று அவர்கள் எண்ணினார்கள். நெடுநாள் வரை ஒவ்வொருவரும் சிந்தனை செய்து முடிவில் அவ்வாறு செய்தலே தக்கதாம் என்னும் முடிவினை யடைந்த வர்களாய் மங்கலீசனிடத்தில் தாம் கருதியவற்றை

இனிய மொழிகளில் எடுத்துக் கூறி அவன் தன் அனுமதியும் பெற்றனர். மங்களீசனுக்கு அவர்கள் கூறியவை ஏற்புடைத்தாகத் தோன்றின.

அவன் அவர்கள் கூறியபடிச் செய்தால் தன்மீது ஜனங்களுக்கும் வெறுப்புண்டாகா தென்பதையும், தமையன் மைந்தனுன புலிகேசி தன்மீது பழி சுமத்து வதற்கு இடமு மில்லை என்பதையும் நன்கறிந்து கொண்டான். அச் சூழ்ச்சியை நிறைவேற்றுவதற் காகத் துணைவர்க ளாயினோரிற் சிலர் அரசாங்கத்தில் உயர்ந்த உத்தியோகங்களைப் பெற்றனர். சிலர் திரண்ட செல்வத்தைப் பெற்றனர். மற்ற நன்மை களையும் சிலர் பெற்றனர். அவர்கள் அனைவரும் மங்களீசன் எண்ணத்தை நிறைவேற்றுவதற்காகத் தம் வேலையைத் தொடங்குவா ராயினர். குடிகள் குழுமும் ஒவ்வோ ரிடங்களிலும் தாம் தற்செயலாய்ச் செல் வார்போலச் சென்று அவர்களுக்குத் தம் கருத்து விளங்குரு வண்ணம் மங்களீசன் குணதிசயங்களைப் பற்றியும், அவன் வெற்றி மேம்பாடுகளைப் பற்றியும், அவன் அரசியல் முறையைப் பற்றியும், அவன் தேசத்திற்குப் புரிந்த நன்மைகளைப் பற்றியும், அவன் மைந்தனின் கல்வி, வீரம், உயர்குணம் முதலியன வற்றைப் பற்றியும் சிறப்பித்துக் கூறுவா ராயினர். இவ்வாறு பல சமயங்களில் கூறினல் குடிகளுக்கு மங்களீசன் பேரில் ஒருவித அன்பு உண்டாகிவிடும்; அதனல், பின், அவர்களைத் தம் கருத்திற் கிணங்கி நடக்கும்படித் திருப்பிக் கொள்ளலாம் என்பது அவர்கள் கருத்து. இவ்வகைப் பிரசாரகர்கள்

சாளுக்கிய தேச முழுவதும் நிறைந்து ஒவ்வொரு கிராமத்திலும், ஒவ்வொரு நகரத்திலும் தம் வேலை-யைச் செய்துகொண்டு வந்தனர். இச் சூழ்ச்சி சில அறிவாளிகளுக்கு விளங்காமற் போகவில்லை.

வாதாபி நகர் எங்ஙனும் மங்கலீசன் துணைவர்கள் மன்னனைப் பற்றியும் மன்னன் மைந்தனைப் பற்றியும் சிறப்பாக எடுத்துக் கூறி வந்தனர். குடிஜனங்களிற் பலர் அவர்கள் கூறுவன உண்மையானவையாயு மிருத்தல் கூடும் என நம்பினர். ஒரு நாட்டில் வாழும் மக்கள் அனைவரும் ராஜ தந்திரங்களை முற்றிலும் உணர்ந்தவர்களா யிருத்தல் முடியா தல்லவா? மற்றும் செவ்வையாய்க் கற்றவர்கள் சிலரே யிருப்பர். பலர் கல்வியில் குறைவுற்றவர்களாகவே யிருப்பர். கல்வி யற்றவர்களாகிய அந்த ஜனங்களுக்கு ஒரு விஷயத்தைப்பற்றிப் பலர் பல தருணங்களில் பலவகையில் எடுத்துரைப்பரேல் அந்த ஜனங்கள் அவர்கள் கூறுவனவற்றை உண்மை யென்றே கொள்ளுவார்கள் அல்லவா? படித்தவர்களோ அவர்கள் கூறுவனவற்றை ஆழ்ந்து சிந்தித்து அவைகளின் உண்மையை யறிய முயலுவர். ஆதலின் கற்றவர்க ளிடத்தில் மங்கலீசன் துணைவர்களின் சூழ்ச்சி பயன்படவில்லை. அது அவர்களுக்கு நன்றாகத் தெரிந்ததே யாகும். மற்றும், கற்றவர்களின் ஜனத் தொகை குறைவுடையதே. கல்லாத மக்களின் ஜனத்தொகை மிகுதியுடைமையறிந்து அவர்களிடத்தே மங்கலீசன் துணைவர்கள் தங்கள் வேலையைச் செய்து காட்டத் தொடங்கினர். வாதாபி நகரத்தில் சில மாதங்களுக்குள் இவர்

கள் செய்து வருவன யாவும் கற்றவர்க்கும் மற்றவர்க்கும் தெரியலாயின. கற்றவர்களிற் சிலர் மங்கலீசனைச் சார்ந்து பேசுவாராகவும் இருந்தனர். பலர் வெறுக்கவுந் தொடங்கினர். கல்லாதவர்களிற் பலர் மங்கலீசனையும் அவன் மகனையுமே சிறந்தவர்களெனக் கொண்டு அவர்களைச் சார்ந்து பேசினர். சிலர் வெறுத்தனர். இவ்வாறு ஓராண் டெல்லைக்குள் வாதாபி நகர் முழுவதும்—என்—சாளுக்கியா தேச முழுதும் மங்கலீசனே சிறந்தவன் என்றும் மங்கலீசனுக்குப் பின் அவன் மகன் அரசனுதற் குரியவன் என்றும் குடிஜனங்கள் பேசிக்கொள்வது கேட்கப் பட்டது. இச் செய்தி புலிகேசியின் காதிலும் விழாதிருக்கக் கூடுமோ? மங்கலீசன், புலிகேசி இளமையாய் இருந்த பொழுது நேசித்து வந்ததைப்போல நேசிக்காம லிருந்ததையும் அவன் உணராதிருக்கவில்லை. நகர வாசிகளில் தகுதியுடைய சிலர் புலிகேசியினிடம் சில விஷயங்களைக் கூறி வந்தனர் ஆதலின் புலிகேசி, தன் சிற்றப்பன், தான் அரசு செய்துவதில் விருப்பற்றவனுயிருக்கிறுன் என்பதையும், தனக்கு இடையூறு விளைவிக்கவும் கூடும் என்பதையும் உணர்ந்தவனுனன்.

மங்கலீசன் தன் துணைவர்கள் எவ்வாறு வேலை செய்து வருகிறுர்கள் என்பதைக் கவனித்து வந்தான். அவர்கள் வேண்டியபடி உயர்ந்த உத்தியோகங்களும் திரவியமும் அளித்து வந்தான். அவர்களை வெறுக்கவு முடியவில்லை. அவர்களுக்கு வேண்டுவன அளிக்கவும் முடியாதவனுய் இருக்கும் நிலை அடைதலைச்

சில நாள்களுக்குள் உணர்ந்து கொண்டான். அரசன் செய்யும் அநீதியைக் கண்ட அமைச்சர் சிலரும், உயர்ந்த உத்தியோகஸ்தர் சிலரும், சில மேன்மை பெற்ற குடிகளும் வெறுக்கத் தொடங்கினர் என்பதை அவன் நன்கறிந்து கொண்டான். இராஜ்ஜியத்தைத் தன்னுடைய தாக்கிக்கொள்ள வேண்டும் என்னும் பேரவாவும், இத்துணைக் காலம் ஆண்ட நாடு புலிகேசிக்குப் போய்ச் சேருமே என்ற பொறுமையும், ஒன்று மாறி ஒன்றாக மனத்தில் தோன்றி வருத்தின. ஆதலின் தனக்குத் துணையா யிருப்பவர்களின் வேலையை நிறுத்தவும் முடிய வில்லை—நிறுத்தாவிடில் குடிஜனங்கள் வெறுப்பார்கள் என்பதும் அவனுக்குத் தோற்றியது.

இருதலைக் கொள்ளியின் இடை யகப்பட்ட எறும்பு போல் தத்தளிக்கும் மங்களீசன் நெடுநாள் வரையில் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். தனக்கு வயதாகி விட்டதையும் உணர்ந்தவன் ஆதலால், தனக்குப் பின் தன் மகனை அரசனாக்கி விடவேண்டு மென்ற எண்ணம் அவன் மனத்தில் வேரூன்றிப் பதிந்து விட்டது. 'கேடு வரும் பின்னே மதி கெட்டு வரும் முன்னே' என்பதும், 'கேடுவான் கேடு நினைப்பான்' என்பதும் பழமொழிகள் அன்றோ? தன்னைச் சிலர் வெறுப்பதை யுணர்ந்தானேனும் அவன் அவர்களைப் பொருட்படுத்த வில்லை. நாளுக்கு நாள் தன் காரியத்தைச் செய்து தன் எண்ணத்தை எவ்வாறாயினும் நிறைவேற்றிக்கொள்ள அவன் முயன்று வந்தான்.

அவன் துணைவரும் முன்னிலும் பதின் மடங்காக வேலைசெய்து வந்தனர்.

'நாம் ஒன்று நினைக்கில் தெய்வ மொன்று நினைக்கும்' என்பது உண்மை. ஜனங்களைத் தூண்டி அவர்களை தங்களுக்கு மங்கலீசன் மகனே அரசனாதல் வேண்டு மென்று கூறும்படிச் செய்தால் பழி யில்லாமலும், நாட்டில் குழப்ப மில்லாமலும் தன் மைந்தனுக்குப் பட்டத்தை யளித்துவிட மங்கலீசன் எண்ணினான் அல்லவா? அந்தோ! பாவம்! அவன் எண்ணம் நிறைவுறா திருக்கும்படிச் சில இடையூறுகள் சம்பவித்தன. மங்கலீசனும் அவன் துணைவர்களும் செய்து வந்த இயக்கத்தை வெறுத்து வந்தனர் சிலர் என்பதும் நமக்குத் தெரியு மல்லவோ? அவர்கள் நாளுக்கு நாள் அவ்வியக்கம் விருத்தியாதலை யறிந்து அதனைத் தடுத்து எப்பாடு பட்டாயினும் கீர்த்தி வர்மனின் முதல் மகனான புலிகேசியை அரசனாக்கி விடவேண்டு மென்று தீர்மானித்துக் கொண்டனர். அவர்கள் குடி ஜனங்களிடம் சென்று முறைமையினால் அரசுரிமை யடையத் தகுந்தவன் புலிகேசியே என்றும், அவன் அரசாட்சியைக் கவர்ந்து தன் மைந்தனுக்கு ஆக்கிக் கொள்ளுமாறு சில துணைவர்களைக் கொண்டு தன்னையும், தன் மகனையும் புகழ்ந்துரைக்குமாறு செய்து அறியாக் குடிகளைத் தன் வசப்படுத்த மங்கலீசன் முயல்கின்றான் என்றும்; புலிகேசி, விஷ்ணு வர்த்தனன், ஜயஸிம்மன் ஆகிய மூவரும், அவர்கள் தந்தை கீர்த்தி வர்மன் இறக்குங் காலத்தில் இளையவர்களா யிருந்தமையால் அவர்களுக்குப்

போஷகனுக மங்களீசனை நிறுவி அரசனுக்கினர் என்றும், கீர்த்தி வர்மனின் மூத்த புதல்வனுன புலிகேசி அரசுரிமை தாங்கும் தக்க பருவத்தை யடைதலும் மங்களீசன் அரசாட்சியை அவனிடம் ஒப்புவிக்கக் கடமைப் பட்டவ னென்றும் எடுத்துக் கூறியதோடு, புலிகேசி தக்க பருவமுடையவனுய் அரசாளும் நிலைமை யடைந்துள்ளான் என்பதையும் தெரிவித்து, அதனுலேயே மங்களீசன் பொருமை கொண்டு இவ்வாறு செய்து வருகின்ருன் என்பதையும் எடுத்து மொழிந்து, அறியாமையால் மங்களீசன் துணையாளர்கள் போதிக்கும் போதனையில் சிக்குண்டு கிடந்தவர்களைத் தம் வசப்படுத்துவா ராயினர். இவ்வாறு சில நாள்களுக்குள் வாதாபி நகர் முழுவதும் இரு திறத்தாரும் ஒருவரை ஒருவர் முக்கியமான விடங்களில் சந்தித்து வாதாடி வெல்ல முயன்றனர். இவ்வாறு இவ் விருதிறத்தாரும் வாதாடுவதால் கல்வி யறிவு பெருத குடி ஜனங்கள் உண்மையினை எளிதில் உணரக் கூடியவ ராயினர். ஆகவே, மங்களீசன் பக்கம் பேசிய குடிகளில் சிலர் முரணத் தலைப்பட்டனர். ஆதலின், நகரில் எங்கும் இப்பேச்சே கேட்கப்பட்டது.

நாள்கள் செல்லச் செல்லத் தம் பக்கல் பேசிய குடிகளின் தொகை குறைவுபடுதலை மங்களீசன் துணைவர்கள் அறிந்தார்கள். இச் செய்தி மங்களீசன் காதிலும் விழுந்தது. தன் மைந்தனுக்கு அரசுரிமையைத் தாபிக்கவேண்டும் என்னும் பொருமை அவன் மனத்தில் மிகுவ தாயிற்று. அதனுல் அவன் செய்வது யாதெனத் தெரியாது திகைப்பினை யடைந்

தவனாய் உன்மத்தன்போ லாயினான். அரசன் அவ்வா றிருத்தல் அவன் துணைவர்களுக்கு நன்மை யை விளைப்ப தாயிற்று. அவன் துணைவர்கள் கூறு வன வெல்லாம் அவனுக்குச் சரியெனவே தோற் றின. ஆதலின், அவர்களுக்கு மிகவும் உரிமை கொடுத்து செய்யத் தகுவனவற்றைச் செய்யும்படி அனுமதி கொடுத்தான். அற்ப குணமாகிய பொருமை யால் பீடிக்கப்பட்ட மன்னன் தன்னறிவு இழந்து அத் துணைவர்கள் கைவலையி லகப்பட்டுச் சுழற்றி விடப்பட்ட பம்பரம் போல அவர்கள் கூறியபடி நடந்து வந்தான். துர்க்குணங்கள் யாவரையும் அறிவு இழக்கும்படிச் செய்யும் என்பது உண்மை.

'தேளுக்கு மணியம் கொடுத்தால் சாமத்திற்கு ஒரு தரம் கொட்டும்' என்பதும், அற்பர்களுக்கு வாழ்வு வந்தால் அர்த்த ராத்திரியில் குடை பிடிப்பார்கள்' என்பதும் உண்மை யாயின. எவ்வாறெனின், சிலர் தமக்கு விரோதமாகவும், நியாயத்திற்காகவும் பாடு படுகிறார்கள் என்பதை நன்கறிந்தவர்க ளன்றோ அவர் கள்! மங்கலீசனுக்கு எதிரிகளாக வுள்ளவர்கள் தாம், தம் வழிப்படுத்திய குடிஜனங்களைக் கலைத்து அவர் கள் பக்கல் இழுத்துக் கொள்வதினால் நாளடைவில் தம் முயற்சி முற்றிலும் வீணாகு மென்பதை உணர்ந்து கொண்டார்கள். ஆதலின் அவ்வாறு தம் முயற்சி வீணாகாதவாறு அவர்களை அடக்கிவிட வேண்டும் என்று நினைத்து எல்லோருங் கூடிச் சதியாலோசனை செய்யலானார்கள். அவர்கள், முடிவாக, முரணி நடப் பவர்களைத் தண்டனைக்குள்ளாக்கி விடுவதே தகுதி

யான முறை யென்று கருதி கைக்கொண்டனர். இம் முறை அவர்களுக்கு நன்மை பயக்குவதாய்த் தோற்ற வில்லை. மங்கலீசனுக்கு எதிர்நடையாக நடப்பவர் களைக் கைதிகளாக்கியும், தண்டித்தும் வரத் தொடங் கினர். அவ்வாறு செய்து வந்தது சில நாளைக்குள் வாதாபி நகர ஜனங்கள் மனத்தைத் துன்புறுத்துவ தாயிற்று. அதனல் அக் குடிகளில் பலர் மங்கலீசனை வெறுக்கத் தொடங்கினர். அது மட்டு மல்ல, புலி கேசிக்கே அரசுரிமையைக் கொடுத்து அரசனாக்க வேண்டு என்று எண்ணங்கொண்டு பாடுபட முயல் வாராயினர். அதனல் மங்கலீசன் துணைவர்களுக்கு இடையூறுகள் பல ஏற்பட்டபோதிலும் திரவியத்தா லும், அச்சுறுத்துவதினுலும் கூடியமட்டில் தன் பக்க வில் ஜனங்களில் பெரும் பகுதியோரைச் சார்ந்து கொள்ளும்படிச் செய்தனர்.

சில நாளைக்குள் எங்குப் பார்த்தாலும் கைதி யாக்குவதும், தண்டிப்பதுமான சமாசாரங்கள் மிகு தியாயின. வாதாபி நகரம் அமைதியை யிழக்கலா யிற்று. எங்கு நோக்கினும் அரசுரிமையைக் குறித்த பேச்சும், அநியாய ஆட்சியைக் குறித்த பேச்சும் கேட்கப்பட்டன. இக் குழப்பம் மங்கலீசன் மனத் தையும் வருத்தியது. ஊரில் நடப்பன யாவும் சிறிது சிறிதாகப் புலிகேசிக்கும் அவன் தம்பிமார்கள் இரு வருக்கும் தெரியவந்தது. அவர்களும் ஜாக்கிரதை யாக விருக்க வேண்டுவன செய்து கொண்டனர்.

## 5. புலிகேசியின் ஏகாந்த நிலை

நகர் எங்கும் குழப்பம் ஏற்பட்டதன் காரணத்தையும், தன் சிற்றப்பன் செய்து வரும் முயற்சிகளையும் புலிகேசி நன்கறிந்து கொண்டான். அப்பொழுது அவனுக்கும் இருபது அல்லது இருபத்திரண்டு வயது இருக்கலாம். சீரிய கல்வியையும் நுண்ணறிவையும் அவன் பெற்றிருந்தான். அவன் வடிவமோ ஆடவர் அவாவும் தன்மைத்தாயிருந்தது. பருத்த உடலும், பருமனுக்கேற்ற உயரமும், அகன்ற மார்பும், பரந்த நெற்றியும், கூரிய நீண்ட மூக்கும், நீண்ட கைகளும், கருணை பொழி கண்ணும் காணுந்தோறும், காணுந்தோறும் பார்ப்பவர் மனத்தைக் கொள்ளை கொண்டன. அவன் க்ஷத்திரிய வம்சத்தில் உதித்தோனாதலால் வீரத்தன்மையும், பராக்கிரமும், அஞ்சா நெஞ்சமும், எதற்கும் சலியாத மனவுறுதியும் உடையவனா யிருந்தான். புலிகேசியைக் காணுவோர் எல்லோர்க்கும் அவனிடத்தில் அன்பு உண்டாகும். ஆதலால் அவனை எல்லோரும் நேசித்தார்கள். ஆனால் மங்கலீசனுக்கு மட்டும் அவனைக் கண்டால் வெறுப்பும் பகைமையும் உண்டாகும். அவன் தம்பிமார்கள் இருவரும் அவனை யொப்பவே விளங்கி வந்தனர்.

புலிகேசி தன் கல்வியை முடித்துக்கொண்டதும் ஆயுதப் பயிற்சிகளைச் செய்து சிறந்த வீரனாய் விளங்கினான். அவன் உருவத்தையும், ஆற்றலையும் உணர்ந்த சேனா வீரர்கள் அனைவரும் அவனைப் புகழ்ந்துகொண்

டாடினர். தான் சிறந்த வீரனாகவேண்டு மென்ற எண்ணத்துடன் ஒரு சேனைக் குழாத்திற்குத் தலைவனா யிருந்தான். அவன் தம்பிமார்கள் இருவரும் இருசேனைக் குழாங்களுக்குத் தலைமை வகித்து வந்தனர். புலிகேசி தன் சேனா வீரர்களை அன்போடு ஆதரித்தும் அவர்களுக்குத் தக்க காலங்களில் தக்கவாறு சொல்லி ஆனந்த முறச் செய்ததுமன்றி, அவன் அடிக்கடி கூறும் வீர மொழிகளால் தாம் ஒவ்வொருவரும் இரண்டிரண்டு வீரர்களின் பலத்தைப் பெற்றவர்களை யொப்ப நினைத்து அவனைப் புகழ்வார்கள். பல சொல்லி என்? சேனா வீரர்கள் அனைவருக்கும் புலிகேசியினிடத்தும் அவன் தம்பிமார்களிடத்தும் குறைவறாத அன்பு குடிகொண் டிருந்தது.

ஒரு நாள் புலிகேசி தனித்ததோர் பொழிலில் ஏகாந்தமாய் உட்கார்ந்திருந்தான். அவன் அவ்விடத்திற்குத் தினந்தோறும் போவதுண்டு. அப்பொழில், நதிக் கரையோரத்தில் அமைந்துள்ளதாகும். அங்கு மலர்ச் செடிகளும், கனி தரு மரங்களும் நிறைந்திருந்தன. ஆங்காங்கு அச் சோலையுள் அமர்வதற்கென ஆசனங்கள் அமைக்கப்பட் டிருந்தன. அச் சோலையிலிருந்த பக்ஷி ஜாலங்களின் சங்கை நம் கணக்கில் அடங்கா. தென்றல் சரீரத்திற்குப் பொருந்துவதாக வீசிக்கொண் டிருந்தது. அது வண்டினம் முரலும் சோலை; மயிலினம் ஆடும் சோலை; கொண்டல் மீதணவும் சோலை; குயிலினம் கூவும் சோலை. மற்றும் அங்கு சென்று உற்று நோக்குவார்க்கு இயற்கை யமைப்பின் மேன்மை நன்கு

விளங்கும். இரு கமுகு மரங்களினிடையே கொடி வழியே மந்திகள் குதித்துச் செல்வதை நோக்கு வார்க்கு கொடிக் கம்பங்களினிடையே கயிற்றின் வழியே நடக்கும் கழைக்கூத்தியர் செய்கையை நினைப் பூட்டும். எவர்தான் அத்தகைய அழகிய சோலைகளில் சென்று உல்லாசமாகக் காலம் கழிக்காதிருப்பார்!

அப் பொழிலில் ஒரு பெரிய மரத்தி னடியில் இடப்பட்டிருந்த ஆசனத்தில் புலிகேசி யமர்ந்திருந் தான். அவன் உட்கார்ந்திருந்த நிலை நோக்குவார்க்கு அவனைப்பற்றி ஏதேனும் எண்ணுமல் இருக்க முடி யாது. இரு கால்களையும் நிலத்தில் நீட்டித் தொங்க விட்டுக்கொண்டு ஆசனத்தின் ஓரத்தில் அமர்ந்தவ னுய் இரு கைகளையும் தொடைமேல் ஊன்றிக் கொண்டு ஏதோ ஒன்றைச் சிந்தித்துக் கொண்டிருப் பவனைப்போல் தோன்றினன். அவன் நெடுநேரம் வரை கண்ணிமை கொட்டாமலும், பின் கொட்டியும், பின் கொட்டாமலுமாக இருந்ததை நோக்கினல் அவன் ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்துள்ளான் என் பதை நன்றுயறிந்து கொள்ளலாம். அவன் பூமியை பார்த்துக்கொண்டிருந்த பார்வை பூமியைத் துளைத் துச் செல்லுமோ என்று அஞ்சத்தக்கதா யிருந்தது. அவனை ஆராய்ந்து நோக்குவார்க்கு அவன் உலகங் களையே நிலைகுலையும்படிச் செய்ய வல்ல தீரன் என்று புலப்படாமற் போகவில்லை. அவன் மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றி மறைந்தன என்பதை அவன் முகம் நன்கு விளக்கிக் காட்டியது. முழு மதி மேக படலத்தால் மறைக்கப்பட்ட பொழுது, ஒளி குறைந்

தும், மேக படலம் விலகியதும் ஒளி மிகுந்தும் காணப்படுதல்போல அவன் முகம் ஒரு சமயம் துக்கத்தில் ஆழ்ந்து ஒளி குறைந்தும், ஒரு சமயம் மனத்தில் உண்டான சந்தோஷத்தால் ஒளிவிட்டுங் காட்டியது. அவன் பத்துப் பதினைந்து நிமிடங்களுக் கொருமுறை பெருமூச்சு விடுகிறதும், தலை யசைத்தலும் நோக்கும் பொழுது அவன் யாதோ ஒரு பெருங் காரியத்தைப் பற்றிச் சிந்தித்து ஒருவகையான முடிவிற்கு வந்ததனைப் புலப்படுத்தும். அவன் அங்கு நெடுநேரம் உட்கார்ந்திருக்கவும் முடியவில்லை. அவ்வாறிருக்க அவன் மனமே இடங் கொடுக்க வில்லைபோலும்! அதனால் தன் இரு கைகளைத் தன் அங்கியின் இரு பக்கங்களிலுமுள்ள பைகளில் போட்டுக்கொண்டு இங்குமங்கும் உலாவிக் கொண்டே யிருந்தான். அவ்வாறு உலாவும் பொழுதும் அவன் நிலத்தையே நோக்கிக் கொண் டிருந்தான். நெடுநேரம் உலாவவும் அவன் மனம் இடங் கொடுக்க வில்லை. பின் அங்குள்ள மற்றோர் ஆசனத்தில் அமர்ந்தான். அப்பொழுதும் அவன் மனம் சமாதனத்தை யடைந்திலது என்பதை அவன் முகக் குறி விளக்கிக் காட்டியது.

> "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
> கடுத்தது காட்டும் முகம்"

என்பது பொய்யா மொழியார் புகன்ற திருக்குறள் அன்றோ. தன் மனத்தைப் புலன்களின் வழிச் செல்லவிடாது, அறிவாகிய அங்குசத்தால் அடக்கித் திருப்பி ஒரு நிலைப்படுத்த அவனால் இயல வில்லை என்று கூறு

வதால் அவன் வீரத்திற்கும், பெருமைக்கும் குறைவு வொன்றுமில்லை. அதனால் அவன் மனம் வெறி கொண்ட மதகயம்போல அலைவுற்றது. அவன் தன்னால் இயன்றவரை மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு ஒருவித முடிவுக்கு வருதற்கு முயன்றான். ஒருசமயம் அவன் முகத்தில் எளிவந்த சிரிப்புத் தோன்றும். மற்றொருசமயம் அவன் முகம் கடுஞ் சினத்துடன் மாற்றலரை யழிக்கும் தோற்றத்தைக் காட்டும். மற்றொரு சமயம் அவன் இருகண்களிலும் நீர் முத்து முத்தாகப் பெருகும். அவ்வாறு வடித்திடும் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, மனத்தையும் திடப்படுத்திக்கொண்டு ஆசனத்தை விட்டு எழுந்து உலவிக்கொண் டிருக்கையில் இருவர் அங்கு வந்தனர்.

அவ்விருவர்களைக் கண்டதும் புலிகேசியின் முகம் மலர்ச்சி யடைந்தது. அவ் விருவரையும் 'வருக' 'வருக' என்று கனிவுற வழைத்து, ஆங்கிருந்ததோர் ஆசனத்தில் அவர்களை யமரச் செய்து அவ் விருவர்களுக்கு மிடையில் தானும் அமர்ந்தான். அவ் விருவர் யாவர் என்று உங்களுக்குத் தெரியுமா? அவர்கள் தான் விஷ்ணு வர்த்தனனும், ஜயஸிம்மனு மாவர். அம் மூவர்களும் கீழ் வருமாறு சம்பாஷிக்கத் தொடங்கினர்.

விஷ்ணு வர்த்தனன் :—புலிகேசி! நீ ஏன் இன்று வெகு சீக்கிரமாக வந்து விட்டாய்?

ஜயஸிம்மன் :—இவன், நாம் வரும்பொழுது முகத்தைத் துடைத்துக்கொண் டிருந்தான். இவன் முகம் வேறுபட்டுக் காண்கின்றது. காரணம் என்ன?

புலிகேசி :—ஆம். இன்று சற்று நேரத்திற்கு முன்பே வந்து விட்டேன். நேற்றிரவு முதல் என் மனம் ஏதோ ஒரு கவலையினால் துன்புற்றது. அதனால் இன்று முன்பே சென்று உலாவி வருவோம் என்று நினைத்து வந்தேன். இங்கு வந்தும் என் மனம் சமாதானத்தை யடைய வில்லை. நல்லது, இருக்கட்டும்; நான் இப்பொழுது ஒரு விஷயத்தைப் பற்றி உங்களோடு கலந்து யோசிக்க எண்ணி யுள்ளேன். அதனைத் தீர ஆய்ந்து நீங்கள் உங்கள் அபிப்பிராயத்தைக் கொடுக்கவேண்டும்.

விஷ்ணு :—நல்லது, அஃதென்ன விஷயம்? கூறு.

புலிகேசி :—என்னிடம் நேற்றுச் சிலர் வந்திருந்தனர். அவர்கள் இந் நகரில் வாழும் மரியாதை மிக்க மனிதர்களில் முதலாக வைத்து எண்ணப்படுபவர்கள். அவர்கள் வந்ததும் நான் அவர்களை மரியாதையுடன் அழைத்து உபசரித்தேன். அவர்கள் என்னிடம் கூறியதைக் கூறியவாறே சொல்லுகிறேன் கேளுங்கள். நம் தந்தையார் நம்மை யிளமைப் பருவத்திலேயே விட்டுவிட்டு விண்ணுலக படைந்து விட்டார் என்பது உங்களுக்கு நன்றாய்த் தெரியும். அவர் அரசாட்சியை, நாம் அப்பொழுது இளையராய் இருந்தமையால், நமது சிற்றப்பனார் ஏற்றுக்கொண்டார். அவர் நம்மை இன்றளவும் காப்பாற்றி வருகிறார். அவருக்கு மகன் ஒருவன் உண்டென்பதும் உங்களுக்குத் தெரிந்ததே. அவர் தன் காலத்தில் காலசூரி இராஜ புத்திரர்களைப் போரில் வென்று

அவர்கள் இராஜ்ஜியத்தையும் தன்னுடைய தாக்கிக் கொண்டு சாளுக்கிய இராஜ்ஜியத்தை விஸ்தாரப் படுத்தி யுள்ளார். அவருக்கு இப்பொழுது விருத் தாப்பியம் வந்து விட்டதையும் நீங்கள் உணர்வீர்கள். அப்பெரியாருக்கு நிறைந்த அனுபவமும், முதிர்ந்த வயதும் ஆகிவிட்ட போதிலும் அவர் தம் மனத்தை யடக்க இயலாதவராய் இருக்கிறார் என்பது தெரி கிறது. அவர் நெஞ்சத் தரங்கில் பொறாமைப் பேய் சென்று கூத்தாடுகிறாள். அவருக்கு அப்பேய் பிடித் துச் சில ஆண்டுகளே யாயின. அதாவது தான் இப் பொழுது ஆளும் இராஜ்ஜியத்திற்கு அரசனாகத் தன் மகனை ஏற்படுத்திவிட வேண்டு மென்று விருப்பங் கொண்டு அதற்கு ஏற்ற முயற்சிகளைச் செய்து வரு கிறார். குடி ஜனங்களுக்குத் தன் மீதும், தன் மகன் மீதும் நிறைந்த அன்புடைமை யுண்டென்பதை உல கிற்குக் காட்டி அவர்கள் விருப்பப்படித் தன் மகனை அரசனாக்கிவிடத் தீர்மானித்து விட்டனர். அதற் காகச் சிலர் அவருக்குத் துணையாளராகக் கூடி யுள் ளார்கள். அவர்களுக்கு உயர்ந்த உத்தியோகங் களும், திரண்ட செல்வமும், பூரண அதிகாரமும் கொடுக்கப்பட் டுள்ளன. அவர்கள் தெருத் தெரு வாய்ச் சென்று நகரெங்கும் குடி-ஜனங்களுக்குப் பிர சங்கங்கள் செய்து வருகின்றனர்.

அவர்கள் பிரசங்கத்தைக் கேட்டு முறை தவறி நடத்த முயலுவதை வெறுத்து அவ்வாறு செய்யத் தகாது என்று கூறிய சிலருக்குக் கொடுந் தண்டனை கள் விதிக்கப்பட்டுள்ளன. அமைச்சர்களில் சிலர்

அரசனுக்கு எடுத்துரைத்தும் பயனற்றதாயிற்று. பயனற்றவர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருத்தலால் விளையும் தீங்குகளை நினைத்து ஜனங்கள் நகரெங்கும் குழப்பத்தை யுண்டாக்குகின்றனர். அரசனே தன் மைந்தனுக்கு முடிசூட்டக் கருதி நெடுநாளாக அதற்காவனவற்றைப் புரிந்து வருகின்றான். மற்றும், முன்புபோல் நம்மிடம் அவ்வளவு விசுவாசம் வைத்திருப்பதாகவும் தெரியவில்லை. அரசன் மைந்தன் நமக்குத் தம்பி முறைமை யுடையவனே யாயினும் அதனால் நாம் நம்முடைய உரிமையை யிழப்ப தழகோ? அரசனையோ பொறாமைப் பேய் பிடித் தாட்டுவதனால் நமக்கு ஒருபொழுதும் அரசு கொடுக்கச் சம்மதியான். 'மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா' என்பது பழமொழி. மற்றும், அரசனது எண்ணங்கள் நிறைவேறா தொழிந்து விடுமாயின், குடிஜனங்கள் அவ்வாறு செய்தல் அடாதென்று நின்றாலும், நமக்கு இடையூறுகளை விளைவிப்பினும் விளைவிக்கக் கூடும். உலகில் செல்வ நிலையை யெய்துதற்காகச் சிலர் செய்யத் தகாதனவும் செய்கின்றனர். ஆதலின், இனி நாம் இங்கு இருக்குமளவும் ஜாக்கிரதையாக இருக்கவும் வேண்டும். நாம் நம்முடைய உரிமையையும் விட்டுவிடுதல் கூடாது. இந் நகர் வாழும் முக்கிய உத்தியோகஸ்தர்களும், உயர்ந்த குடிஜனங்களும் நம்மையே ஆதரிப்பதாக நேற்று வந்தவர்கள் சொல்லக் கேள்விப்பட்டேன். ஆதலின், இனி நாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். மன்னன் மனப்படிக் கருமங்கள் எளிதில் இனி

தாக நடைபெருவிடில் நம்மீது மன்னன் பகைமை பாராட்டுவான் என்பது திண்ணம். நகரில் குழப்பங்களும் ஏற்படும். அதனுல் மன்னன் நம்முடன் போருக்கெழினும் எழும். ஆதலின் நாம் எல்லாவற்றிற்கும் சேனைகளைத் திரட்டி வைத்துக்கொள்ள வேண்டும். இதுவே அவர்கள் கூறிய செய்தி. இதனைப்பற்றிச் சில காலங்களுக்கு முன் நான் கேள்விப்பட்ட துண்டு. அது நேற்று தெற்றென விளங்கலாயிற்று.

விஷ்ணு வர்த்தனன் :—அவ்வாருயின் நாம் சேனைகளைத் திரட்டிக் கொண்டு போர் புரிந்தேனும் நம் உரிமையை நிலை நாட்டுவோம். அதனுல் நாம் உயிரிழப்பினும் யாதொரு குறைவுபாடு மின்று.

ஜயஸிம்மன் :—நான் இவற்றை யெல்லாம் முன்பே யோஜித்தவனே. இன்று நான் நினைத்த படியே யாயிற்று. நாம் சேனைகளைத் திரட்டிக் கொண்டு ஜாக்கிரதையாக விருப்போம் என்றுலும் நாம் முன்பு ஒரு காரியம் செய்தல் நல்லது. அஃதென்ன வென்றுல் நாம் இப்பொழுது அரசுரிமை பெறத் தகுதியுடையவர்களா யிருத்தலின் நேரிற் சில முக்கியமானவர்களை வைத்துக்கொண்டு நம் உரிமையைக் கேட்போம். மன்னன் அதற்கிணங்காணுயின் பல தந்திர வழிகளிலும் கேட்டுப் பார்த்துவிட்டு முடிவில் போர் புரிந்தேனும் நாம் உரிமையை நிலை நாட்டுவோம். அவ்வாறு செய்தல் அடாத காரியமும் அன்று. பாரதத்திறைல் உறவினர்களே யாயினும், போரினைப் புரிந்தேனும் தம் உரிமையை நாட்

டுதல் தகுதியுடையதே என்பதை நாம் அறிந்திருக் கிறோம்.

புலிகேசி:—நாம் சமாதானமாகவே நமது உரிமையைக் கேட்போம். அவ்வாறு கேட்டும் கொடுக்க மறுத்தால் சமயத்திற் கேற்றவாறு நடந்துகொள்வோம்........நான் இன்று இங்கு இன்னும் சற்று நேரம் தங்கியிருந்து வரலாம் என்று நினைக்கிறேன். உங்களுக்கு வேலையிருப்பின் முன்பாகப் போகலாம்........தனியாக நல்ல காற்றில் சிறிது நேரம் இருந்தால் மனம் அமைதியை யடையும் என்று நான் நினைக்கிறேன்.

விஷ்ணு:—இதனைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். எங்களுக்கு வேலை இருக்கிறது. நாங்கள் சென்று வருகிறோம்...............நல்லது.

அவ் விருவர்களும் சென்றபின் புலிகேசி தனியாக ஓரிடத்தி லமர்ந்தான். அவனுக்குத் தம்பிமார்கள் கூறியவைகளைக் கேட்டதும் மனத்தைப்பற்றியிருந்த கவலை ஒருவாறு நீங்கியதுபோல் தோன்றிற்று. ஆயினும் சிந்தனையற் றிருக்கவில்லை. பின், கீழ் வருமாறு தனக்குள் எண்ணுவானுனன். "என்னே! எந்தை, எம்மை இளமையில் விட்டு இறந்ததனால் மங்களீசன் அரசனாக்கப்பட்டான். அவன் உத்தமனாயிருப்பானே யானால், நான் எப்பொழுது அரசுரிமை யெய்துதற் குரியவனாயினேனோ, அப்பொழுதே என் உரிமை அரசாட்சியைக் கொடுத்திருக்க வேண்டும். அவ்வாறு செய்யாதது பெரும் பிழை. அதனை யுணராவிட்டாலும் தனக்குப் பின்

அரசு பட்டம்பெற உரியவன் நான் என்பதை அவர் உணராத தன்றே. அவ்வாறு உணர்ந்தும் இராஜ்ஜியத்தைத் தன் மைந்தன் அடையவேண்டுமென்ற எண்ணங்கொண்டு என் உரிமையை யிழக்கும்படிச் செய்வது அறமாகுமா? அவனுக்குத் துணைவர்களாக வந்துள்ளவர்களோ எதனைச் செய்வதற்கும் துணிவுடையவர்கள். ஒரு சமயம் அவர்கள் சூழ்ச்சி நிறைவேறு தொழிலின் நம்மை வஞ்சனையால் கொல்லவும் முயல்வரே. அதுபோது நாம் செய்யத் தகுவன யாவுள? பிறன் பொருள் வெளவும் கெட்ட எண்ணம் உடையானிடத்தில் அறநெறி பின்பற்றி எத்துணை யெடுத்துரைப்பினும் அவனிரு செவிகளினும் நுழையுமோ? எல்லாவற்றிற்கும் நாமும் ஜாக்கிரதையாக இருக்கவேண்டியது முதற்கடமை யாயிற்று.... ...........நாம் உறவினை யுன்னிச் சற்றுத் தயங்கியிருப்போமாயின் உரிமையை யிழந்து பரிவப்பட்டுப் போதல் நிச்சயம். ஆதலால் நாம் தக்கார்களைக் கொண்டு மன்னனுக்கு எதிர் நடையாகப் பிரசாரம் செய்து வரவேண்டும். அவ்வாறு செய்வது மன்னனுக்கும் தெரியக் கூடாது. அதனால் ஒருசமயம் நம்மீது சந்தேகங்கொண்டு நம்மைத் தாக்கிப் போர் மலைய மன்னன் நினைத்தலுங் கூடும். அவ்வாறாயின் போரில் ஆண்மையுடன் பொருது வெற்றிகொண்டு நமது உரிமையை நிலை நாட்டவேண்டும். நேரமாயிற்று" என்று எண்ணிக்கொண்டே அப்பொழிலினின்றும் புலிகேசி வெளிவந்தான். புலிகேசி அரண்மனை புகுந்து உண்டி யுண்டு, தன் படுக்கை

யறைக்குச் செல்லு முன், அவன் நண்பரிற் சிலர் அவனிடம் வந்தனர். அவர்களைப் புலிகேசி அன்புடன் வரவேற்று இரவு வெகு நேரம்வரை வார்த்தை யாடிக் கொண்டிருந்தான். அவர்களும் அவ்விஷயத்தைப் பற்றி அவனிடம் பேச வந்தவர்களே. புலிகேசியின் ஆலோசனையின்பேரில் அவர்கள் மன்னனுக் கெதிர் நடையாகப் பிரசாரம் செய்து குடிஜனங்களைத் திருப்ப முயலுவதென்றும், அவ்வாறில்லையேல் முடிவில் போர் தொடுத்தேனும் புலிகேசிக்கு உரிமையை நிலைநாட்டி மன்னனுக்குவ தென்றும் தீர்மானம் செய்து கொண்டோர்களாய் புலிகேசியினிடம் விடை பெற்றுக்கொண்டு அவ்விடம் விட் டகன்றனர்.

## 6. மங்கலீசன் மனத் துணிவு

சில நாட்கள் கழிந்தன. வாதாபி நகரத்தில் எங்கு பார்த்தாலும் மங்கலீசனைப் பற்றியும் அவன் மகனைப் பற்றியும் கூறுவார்களும். அவர்களுக்கெதிர் நடையாய்க் கூறுவார்களும் நிறைந்து காணப்பட்டனர். பொது விடங்களிலெல்லாம் இவ் விருவகையினர் கூட்டங்கள் நடைபெற்றன. அக்கூட்டங்களில் குழப்பங்களும் ஏற்படுவ தூண்டு. அது காரணம் பற்றிப் பலர் சிறை வாசம் புகுந்தது முண்டு. அரசனுக்கு நாளுக்கு நாள் கவற்சி பெரிதாயிற்று. நாட்டில் எவ்விடத்தும் குழப்பம் இருத்தலேயும், தக்க பெரியோர்கள் தன்னிடத்து நேரே வந்து தான் செய்துவரும் தவற்றை யெடுத்துக் காட்டித் தடுப்பதையும், நினைக்க நினைக்க அவன் மனம் புண்ணுயிற்று. புலிகேசியே நகரில் நடப்பனவற்றை யறிந்து கொண்டு மற்ருேர் கட்சியை யுண்டாக்கி விட்டுவிட்டானே என்று மன்னன் பலதடவைகளில் நினைத்தான். அவ்வாறு நினைத்த நினைப்பு அவனுக்கு நாளுக்கு நாள் உறுதியையே யுண்டாக்கி மனோதிடத்தை யழித்து வந்தது. 'மருண்டவன் கண்களுக்கு இருண்ட தெல்லாம் பேய்' என்றபடி, அவன் எதனை நினைத்தாலும் அது அவனுக்குத் துன்பத்தை விளைப்பதாகவே தோன்றியது. அந்தோ பாவம்! அவன் என்ன செய்வான்! மைந்தன்மேல் வைத்த வாஞ்சை மற்றவன் நிலத்தையேனும் கவர்ந்து கொடுக்கச் செய்தது.

ஒருநாள் அவன் ஓரறையில் தனித்து ஏதோ சிந்தனையில் இருக்கையில் ஒரு வேலைக்காரன் ஒரு சீட்டைக் கொண்டுவந்து கொடுத்தான். அதில் அந்நகரில் சிறந்த செல்வரும், சாளுக்கியர் குல விருத்தியை நாடி உழைப்பவரும், அரசாங்க விஷயத்தில் சிறந்த தலைமை வகிப்பவருமான ஒரு பெரியார் பெயர் எழுதப்பட் டிருந்தது. அதனைப் படித்துப் பார்த்து அவரை உள்ளே வரவிடும்படிக் கட்டளை யிட்டான். அவர் உள்ளே வந்ததும் ஆதன மளித்து அரசன் அமரச் செய்தான். அவரும் அமர்ந்து கீழ் வருமாறு பேசலாயினர்; மன்னவ! நாட்டில் பெரிய குழப்பங்கள் உண்டாகின்றன. நீர் நும் மைந்தனுக்கு அரசாட்சியைக் கொடுக்க முயலுகின்ற கருமம் எல்லோருக்கும் நன்றாய்த் தெரிந்துவிட்டது. நீர் எவ்வளவோ மறைத்துக் கருத்து வெளிப்படாதவாறு குடி ஜனங்களை நும் வசப்படுத்த முயன்றாலும் நும் கருத்து அவர்களுக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது. நுமக்கு அரசாட்சி கிடைத்ததே நும் தமையன் இறந்ததினால்தான். அதிலும் கீர்த்திவர்மன் இளமைப் பருவமுடைய பிள்ளைகளை விட்டுவிட்டு இறந்ததனால் இவ்வளவு ஆண்டு நீர் ஆட்சி புரிந்தீர். இப்பொழுது உமக்கு முதுமைப் பருவம் கிட்டிவிட்டது. கீர்த்திவர்மன் புதல்வர்களும் தம் இராஜ்ஜியத்தைத் தாமேற்று ஆண்டுவர உரிய பருவ முற்றவர்களாயிருக்கிறார்கள். அவர்களுக்குள் மூத்தவனான புலிகேசிக்குப் பட்டத்தை கட்டி அரசாட்சியை அளிப்பதே தகுந்த முறையும் தருமமு மாகும். நீர் இப்

பொழுது கொண்டிருக்கும் கருத்தோ பழியையும் பாவத்தையும் விளைவிப்பது. அறிவோர்களால் வெறுக்கும் தன்மையது. நம் கருத்திற்கு இணங்கியவர் இந் நாட்டில் சிலர் இருப்பினும் பலர் நமக்கு விரோதமாகவே இருப்பர். இப்பொழுதே நாட்டிலெங்கும் குழப்பம் ஏற்பட்டு விட்டபடியால் செயத் தகுவன ஆராய்ந்து செய்ய வேண்டும். இல்லையேல் போர் நிகழினும் நிகழும். யான் அவற்றை யெல்லாம் எடுத்துக் கூறுவான் வந்தேன். ஆய்ந்து செய்வன செய்க'' என்று கூறி விட்டு விடை கொண்டு சென்றார்.

மங்களீசனுக்கு அப் பெரியார் கூறியவை துன்பத்தை விளைவித்தன. அவன் மனம் கொதிப்படைந்தது. தன்னால் அடக்க வொண்ணாச் சினமும் துக்கமும் தோன்றின. புலிகேசியையும் அவன் தம்பிமார்களையும் அறவே வெறுத்தான். அவன் மனத்தில் பற்பல எண்ணங்கள் தோன்றி அமைவதாயின. சிற்சில சமயங்களில் அச்சமும் அவன் மனத்தில் தோன்றி அவன் மனவலியைக் குன்றச் செய்தது என்பது பொய்யல்ல. தன் துணைவர்கள் புரிந்து வருவனவற்றை அறிந்த புலிகேசியும் அவன் தம்பிமார்களும் நகரில் வாழும் பெருமக்களைக் கண்டு பேசி ஏதேனும் ஏற்பாடு செய்திருக்கக் கூடும் என்றும், அதனாற்றான் அப் பெரியார் வந்து கடிந்து பேசிச் சென்றனர் என்றும் நினைத்தான். புலிகேசிக்கும் துணைவலி ஏற்பட்டுவிட்டதென்பதை ஆய்ந்தறிந்துகொண்டான். புலிகேசியையும் அவன் தம்பி

மார்களையும் நினைக்க நினைக்க அவன் மனம் புண்பட்டது. செய்வது யாதெனத் தோற்று நிலையில் மங்களீசன் அறையில் தனிமையாகச் சித்திரப் பதுமையொப்ப அசைவற்று அமர்ந்திருந்தான்.

புலிகேசி நெடுநாள்வரை தீர ஆலோசித்து ஒரு முடிவுக்கு வந்தான். தன் சிற்றப்பன் தன்னையும் தம்பிமார்களையும் நாளுக்கு நாள் மிகுதியாக வெறுப்பதை நன்குணர்ந்தான். தான் நெடுநாள் ஆலோசித்து முடிவுக்கு வந்த விஷயத்தைத் தம்பிமார்களிடம் கூறி அவர்கள் கருத்து யாது என்பதையும் புலிகேசி உணர்ந்து கொண்டான். அவர்களும் அவன் கருத்திற் கிணங்கினர். பின் புலிகேசி வாதாபி நகரிலுள்ள சில பிரபுக்களின் கருத்துக்களை யறிந்து கொண்டு தன் னுரிமையைக் கொடுக்கும்படி மன்னனைக் கேட்பதென்று தீர்மாணம் செய்துகொண்டான். பின் அவன் தம்பிமார்களுடன் புறப்பட்டு மன்னன் இருக்கும் அறையை நோக்கி வரலாயினன்.

சங்கேதப்படி மன்னன் அறையில் அந் நகரில் வாழும் பிரபுக்களிற் சிலரும் உயர்ந்த உத்தியோகஸ்தரிற் சிலரும் வந்தமர்ந்திருந்தனர். அப்பொழுது புலிகேசியும் அவன் தம்பிமார்களும் அவ்வறைக்குள் நுழைந்தனர். அவர்களைக் கண்டு ஆங்கு வந்திருந்தோர் எழுந்து நின்று பின் தம்மிருக்கையில் அமர்ந்தனர். மங்களீசன் அவர்கள் வருகையை வெறுத்தான் எனினும் அதனை வெளிக்காட்டாது அன்புடனழைப்பவனைப்போல் அவர்களை யழைத்து ஆதனங்களிலமரும்படிச் செய்தனன். அவர்களும் அமர்ந்தனர்.

மங்கலீசன் முகம் மாறுபாட்டை யடைந்தது. பற்பல எண்ணங்கள் கணத்தில் தோன்றி மறைவ தாயின. அவன் மன நிலையை முகம் கண்ணாடிபோல் காட்டிற்று. சிறிது நேரம் அவ்வறை அமைதிபெற்றிருந்தது. அப்பொழுது அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்தனர். பின் எல்லோரும் புலிகேசியின் முகத்தை நோக்கினர். புலிகேசியும் அவர்கள் குறிப்பை யறிந்துகொண்டான். அவன் எழுந்து தனக்கு உரிமையான அரசாட்சியைத் அளித்துவிட வேண்டுமென்று கேட்பதற்குத் துணிந்தனன். அவன் மனம் உறுதியைப் பெற்றிருந்ததேனும் சிறிது தளர்ச்சியையும் அடைந்தது என்று கூறுதல் பொய்யாகாது. என்னிருப்பினும் மங்கலீசன் அவனுக்குச் சிற்றப்பன் அல்லனோ? இளமைப் பருவம் முதல் தன்னையும் தம்பிகளையும் வளர்த்தவன் என்பதை அவன் மறக்க வில்லை. ஆதலின் மன்னன் கருத்தை மாற்றிக் கொள்ளும்படியாகப் பேசுவதற்குத் துணிந்ததை நினைத்த புலிகேசிக்குச் சிறிது மனத்தளர்ச்சி யுண்டாயிற்று என்பது இழுக்காகாது. நெடுநேரம் சிந்தித்துப் பின் துணிந்து தன் உரிமையைத் தான் அடைவது கடமை என்ற எண்ணத்தால் பேச எழுந்தான். எல்லோர் நாட்டமும் அவன் முகத்தையே நாடிற்று. அவனும் தைரியத்துடன் கீழ்வருமாறு பேசலாயினன்.

"என் அன்புள்ள தந்தையே! பெரியோர்களே! நான் இப்பொழுது பேசுவது ஒரு சமயம் ஆச்சரியத்தை உண்டாக்கலாம். நெடுங் காலமாகத் தீர

யோசித்து முடிவு செய்துகொண்ட பின்னரேதான், நான் இன்று உங்கள் முன்னிலையில் பேசத்தொடங்கு கிறேன். பிழை யுளதாயின் பொறுக்க வேண்டும். சாளுக்கிய ராஜ்ஜியத்தை எம் தந்தை கீர்த்தி வர்மன் ஆண்டு வந்தனர் என்பது உங்களுக்குத் தெரியும். நாங்கள் இளங் குழந்தைகளாக இருக்கும் தருவாயில் அவர் இறந்து விட்டார் என்பதும் உங்களுக்குத் தெரிந்ததே. அக் காலத்தே சாளுக்கிய ராஜ்ஜியத் தைப் பரிபாலிக்கவும், எங்களைப் போஷிக்கவும் எமது தந்தையின் உடன் பிறந்தாரும், இப்பொழுது மன்ன னை விருப்பவருமான தாங்கள் முன் வந்தீர். நாங்கள் தங்களால் செவ்வனே போஷிக்கப்பட்டு வந்தோம். தாங்களும் எங்களை அன்புடன் பாதுகாத்து வருகின் றீர். என்றாலும், இப்பொழுது என் மனத்தில் தோன் றிய எழுச்சியைக் கூறாம லிருக்க முடியவில்லை. இச் சாளுக்கிய நாடெங்கும் ஒருவித பிரசாரம் ஒரு சிலரால் நடைபெற்று வருகிறதென்று நான் கொஞ்ச காலத் திற்கு முன்புதான் அறிந்தேன். ஆனால் அத்தகைய பிரசாரம் சில வாண்டுகளாகவே நடத்தப்பட்டு வரு கின்றதென்பதை நான் முடிவில் அறியலானேன். இப் பொழுது நானும் என் தம்பிமார்களும் தக்க பருவம் அடைந்திருக்கின்றோம். நான் அரசாட்சி புரியும் ஆற் றலையும் தகுதியையு முடையவனா யிருக்கிறேன் என் பதை நான் இன்று உங்கள்முன் வந்து என்னுரிமைக் காகப் பேசுவதினாலேயே நன்கறியலாம். சாளுக்கிய ராஜ்ஜியம் முறைப்படி எனக்குச் சொந்தமான தாத லால் என் இராஜ்ஜியத்தை என்னிடம் ஒப்புவிக்க

வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இதுகாலம் வரை இவ்வாறு முன்வந்து கேட்காமல் இன்று கேட்டதற்குக் காரணம் என்னையோ வென்றால், என்னையும் என் தம்பிமார்களையும் பற்றித் தூற்றிப் பிரசாரம் செய்யப்பட்டு வருதலாலும், எனக்கும், என் தம்பிமார்களுக்கும் உரிமை யில்லை; மற்றும், அரசாளும் திறனுமில்லை என்று எடுத்தியம்பிக் குடிகள் மனத்தை மாற்றி வருவதலாலும், என்பால் அன்பு கொண்டு உண்மையை எடுத்து இயம்புவார்களை அநியாயமாய்த் தண்டித்து வருதலாலும், முன்புபோல் என்னிடமும் என் தம்பிமார்களிடமும் எம் சிற்றப்பனாராகிய மன்னருக்கு அன்பில்லையாமையாலும், பிறவற்றாலும் உணர்ந்தேன். என் தந்தை ஆட்சியைத் தானடைந்ததால் தனதாக்கிக்கொண்டு தன் மைந்தனுக்கு முறையாக வாய்க்கும்படிச் செய்யும் வேலைகளைக் குறித்து என்னிடம் சிலர் எடுத்தியம்பிய துண்டு. பெரியோர்களே! நான் சிறுவன். நான் சொன்னவைகளில் குற்றங்கள் இருக்கலாம். என்றாலும், இச்சாளுக்கிய ராஜ்ஜியத்தின் ஆட்சி யுரிமை என்னுடையதே யாகுமென்பது உங்கள் எல்லோருக்கும் தெரிந்ததே. ஆதலின் என்னுரிமை எனக்குக் கிடைக்கவேண்டும். இவ்வாறு கேட்பதினால் யானாவது என் தம்பிமார்களாவது எமது சிற்றப்பனை வெறுத்தவர்கள் அல்லர் என்று நினையாமல் இருக்கும்படி வேண்டுகிறோம்'' என்று கூறி யமர்ந்தான். அவன் வார்த்தைகளைக் கேட்ட மங்கலீசன் மனம் திடுக்கிட்டது. கோபம் உண்டாயிற்று. கண்கள் சிவந்தன. முகம் மாறுபட்டது. இருதயம் படபட

வென்றடித்துக்கொண்டிருந்தது. ஆதனத்தில் அமர்ந்திருக்க முடியவில்லை. அவன், புலிகேசியை ஒரே பாய்ச்சலாய்ப் பாய்ந்து ஒரே அடியில் உயிரைக் கவர்ந்து கொள்பவனைப்போல் தோன்றினன். என்றாலும் அந்தோ! பாவம்! அவன் பொறுமை அவனை அவ்வாறு செய்தது. அவன் என்ன செய்யக்கூடும்! அவன் நிலையை அங்கு அமர்ந்தவர்கள் அறிந்து கொண்டார்கள். மங்கலீசன் மௌனமா யிருந்தான்.

அப்பொழுது அங்கிருந்தவருள் ஒருவர் எழுந்து பேசத் தொடங்கினர். அதனை மற்றவர்கள் ஆவலோடு கேட்டுக்கொண் டிருந்தனர். அவர், "மன்னவ! நாங்கள் சில ஆண்டுகளாக நம் நாட்டிலும் நகரிலும் நடந்துவரும் பிரசாரத்தை யுணர்வோம். அத்தகைய பிரசாரம் தங்கள் தூண்டுதலினலேயே நடந்து வருகின்ற தென்பதையும் நன்கறிந்துகொண்டோம். தாங்கள் நாட்டின் ஆட்சி யுரிமையைத் தங்கள் மைந்தனுக்கு அளிக்கவேண்டும் என்னும் அவாவினல் அல்லன செய்யவும் ஒருப்பட்டு விட்டீர். அதற்குத் துணையாகத் தங்களுக்குச் சிலர் துணையாளராக வந்து சேர்ந்துள்ளார்கள். அவர்களுக்கோ தலை கால் தெரியவில்லை. அவர்களுக்குத் திரவியமும், அதிகாரமும் அளிக்கப்பட் டுள்ளன. அவர்கள் அவைகளின் வலிகொண்டு செய்வன, தவிர்வன வறியாது மனம்போன போக்கில் நடந்து வருகிறார்கள். அவர்களால் நல்லறிவாளரும், நியாய வழிகளில் நடப்பவர்களும், சாளுக்கிய இராஜ்ஜியத்தின் மேன்மையையே நாடுபவர்களுமான பெரியார்கள் பலர்

துன்புறுகின்றனர். அதனால் நாட்டில் எங்கும் குழப்ப முண்டாகின்றது. இத்தகைய குழப்ப முண்டாதல் நாட்டிற்கு நன்மையை யளிப்பதா யிராதென் பதைத் தாங்கள் ஆழ்ந்து சிந்தித் தறியவேண்டும். இக் காலத்தில் இச்சாளுக்கிய ராஜ்ஜியம் மேன்மையை யடைந்துள்ளது. இது இன்னும் மேனிலைக்கு வரக் கூடிய தென்பதற்குச் சில குறிகள் உண்டு. விதர்ப் பம் கோசலம், கலிங்கம், கொங்கணம், உத்கலம், கூர்ஜ்ஜரம், பல்லவம் முதலிய தேசங்களுக்கு இது கண்ணிலுற்ற மண்போல் விளங்குகின்றது. இந்நிலை யில் இந்நாட்டில் குழப்ப முண்டாகுமானால் அது தீங்கை விளைவிப்பதாகும் என்பதை நான் சொல்லா மலேயே தாங்கள் அறிந்துகொள்ளலாம். இந்நாட்டின் ஆட்சி யுரிமை கீர்த்தி வர்மனின் முதற் புதல்வனை இங்குத் தங்கள் பக்கலில் அமர்ந்திருக்கும் இளஞ் சிங்கத்தை யொத்த புலிகேசிக்குச் சொந்தமானது என்பது தங்களுக்குத் தெரியாதது மன்று. புலி கேசியோ இப்பொழுது தக்க பருவ முடையோனாய், வீர தீர சூரனாய் விளங்குவதோடு அரசாட்சியை ஏற் றுக்கொள்ளவும் அருகனா யிருக்கிறான். தங்களுக் கும் முதுமைப் பருவம் கிட்டிவிட்டது. ஜனங்களுக் கும் புலிகேசி அரசாட்சியைப் பெற்று அரசாளத் தாம் அவனாட்சியின்கீழ் வாழ வேண்டு மென்னும் விருப்பம் உண்டா யிருக்கின்றது. தங்களுக்குத் தாங் கள் இருக்குங் காலத்திலேயே சாளுக்கிய இராஜ்ஜி யத்தின் ஆட்சி யுரிமையைத் தங்கள் மைந்தனுக்கு அளித்து அவன் அரசாளுவதைக் காணவேண்டும்

என்னும் விழைவு உண்டாய் விட்டது. அவ் விழைவு நியாயமானதோ என்று சற்று சிந்தித்து அறிவது தங்கள் கடமையே. ஒருவனுக்கு உரிய ஒரு பொருவின் உரிமையை மற்ெருருவன் கொள்ள நினைப்பது நியாயமானதும் அன்று; பாவ சம்பவமு மானது. பாரதத்தில் பாண்டவர்களுக்குரிய உரிமையைக் கௌரவர்கள் கொள்ள நினைத்து வலித்ததால் அவர்களுக் குற்ற தன்மை யாது என்பது தங்களுக்குத் தெரியாத தன்றே. ஆதலின், மன்னவ! நெடிது ஆய்ந்து செயத் தகுவன செய்தல் வேண்டும். உலகில் முறைமை யென்பது ஒன்று உண்டு. மற்றும், புலிகேசியும் நிறை குணத்தவன், நின்னினும் நல்லனல்; அவன் உரிமையை அவனுக்கு வழங்கிக் குடிகளின் விழைவினையும் பூர்த்தி செய்விக்க வேண்டும். அவ்வாறு செய்தல் தங்களுக்கு அழியாப் புகழையும் மேன்மையையு முண்டாக்கும்' என்று கூறி யமர்ந்தார். அவர் கூறியவை மங்கலீசனுக்குக் கொழுந்து விட்டெரியும் நெருப்பினில் நெய்யூற்றினுற் போலிருந்தது. சினமோ மங்கலீசன் உள்ளத்தைக் கவர்ந்தெழுந் தோங்கிற்று. அதனை எல்லோரும் அறிந்தனர்.

அங்கு வந்தவர்களில் சிலர் எழுந்து ஒவ்வொருவரும் புலிகேசிக்கு அரசுரிமையைக் கொடுத்துவிட வேண்டுமென்றும், அவ்வாறு கொடாதிருத்தல் நாட்டிற்குப் பல்லாற்ருனும் தீமையை விளைப்பதாகுமென்றும், அதனல் பெருத்த கஷ்டமும், நஷ்டமும் விளையும் என்றும் கூறி அமர்ந்தனர்.

அவற்றையெல்லாம் கேட்ட மங்களீசன் மனம் புண்ணுயது. ஒன்றும் கூறுமல் எழுந்து செல்லவும் அவனல் இயலவில்லை. அவர்களைத் தன் அதிகார வன்மையினல் தீங்குறுத்துவதற்கும் அவன் அஞ்சினன். ஏனெனில் அவ்வாறு செய்யின் தனக்கும் தன் மைந்தனுக்கும் தானே கெடுதியைத் தேடிக்கொண்டவனுவான் என்பதை அவன் உணர்ந்தான். ஆதலின் தன் கருத்தையும் விளக்கி யவர்களுக்குப் பதிலு மளித்தது போலிருக்க வேண்டுமென்று எண்ணித் தன் மன வெழுச்சியை யடக்கிக்கொண்டு மங்சலீசன் கீழ் வருமாறு பேசலானன். "அன்பர்களே! நீங்கள் உரைத்தன யாவற்றையும் கேட்டேன். நீங்கள் சிறிதும் சிந்தித் தறியாது பேசிவிட்டீர்கள் என்பது என்னுடைய அபிப்பிராயம். சற்று நீங்கள் சிந்தித்திருப்பின் நான் கொண்டுள்ள கொள்கை தவறுடைய தல்லவென்பதை யுணர்வீர்கள். என் தமையன் கீர்த்திவர்மன் ஆட்சி புரிந்தபோது இருந்த சாளுக்கிய இராஜ்ஜியத்திற்கும், என்னுட்சியில் உள்ள சாளுக்கிய இராஜ்ஜியத்திற்கு முள்ள வேற்றுமை உங்களுக்குத் தெரிந்ததே. நான் இவ்வரசாட்சியை யேற்றுக் கொண்ட பிறகு காலசூரி இராஜ புத்திரர்களை ஜயித்து அந் நாட்டையும் இதனுடன் சேர்த்திருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியாததோ? நான் அரசனை பிறகு இச் சாளுக்கிய ராஜ்ஜியாபிவிருத்திக்காக எவ்வளவு பாடுபட் டுள்ளேன் என்பது உங்களுக்குத் தெரியாதோ? என் தமையன் கீர்த்தி வர்மன் இறந்த பின்பு இச் சாளுக்கிய ராஜ்ஜியம் என்னல் எவ்வளவு

மேன்மைக்குக் கொண்டுவரப்பட்டுள்ள தென்பதை நீங்கள் நன்ருய் ஆராயந் தறியுங்கள். என் ஆட்சிக் காலத்தில் குடிகளுக்கு விளைந்துள்ள நன்மைகள் பல வென்பதை நீங்கள் உணர்வீர்கள். எனக்கோ முது மைப் பருவம் நெருங்கிவிட்டது. இந்த அரசு என் தமையனிட மிருந்து நான் பெற்றதென்பதை நன் குணர்வேன். முறைமையில் புலிகேசி உரிமை யுடைய வன் என்பது எனக்குத் தெரியாமற் போகவில்லை. என்ருலும் நான் கூறுவனற்றைச் சிறிது சிந்தித்துப் பாருங்கள். என் தமையன் காலத்தில் இருந்ததைக் காட்டிலும் என் காலத்தில் இந்நாடு நன்மைகள் பல வற்றை யடைந்துள்ளது. அதுமட்டு மல்ல. இராஜ்ஜிய மும் பெரிதாக விஸ்தாரமாக்கப்பட்டுள்ளது. இந்நாடு மேன்மை யுறவேண்டும் என்னும் எண்ணத்தால் அல் லும், பகலும், அனவரதமும் நான் கொண்ட கவலையும் பட்ட பாடும் சொல்லுந் திறத்தனவன்று. இச் சாளுக் கிய ராஜ்ஜியத்தை என்றும் அழியாது ஓங்கிடச் செய்யத் தக்க வழிகளினுல் நிலைபெறும்படிச் செய்த வன் நான் என்பதே என் முழு நம்பிக்கை. ஆகை யால் உண்மையில் நானும், என் சந்ததியார்களுமே இந்நாட் டரசுரிமையை யெய்துதற்குக் கடமையும், உரிமையு முள்ளவர்கள். அவ்வா றிருப்பது மன்றி என் மகனும் கல்வி, கேள்வி, பராக்கிரமம், பருவம் முதலியவைகளிற் சிறந்து விளங்குகின்ருன். குடிகள் அவனை மிகவும் நேசிக்கிருர்கள் என்பதை நான் நன் கறிவேன். இச் சாளுக்கிய ராஜ்ஜியத்தை அவன் கைக் கொண்டு ஆண்டு வருவானுயின் இக் நாடு மிக்க

நன்மைகளையும் கீர்த்தியையும் பெறும் என்பதில் ஐய மில்லை. மற்றும், அவன் என்னிலும் பதின்மடங்கு மேலாகக் குடிகளால் நேசிக்கப்படுவான் என்பதும், அவன் இச்சாளுக்கிய வம்சத்திற்கு அழியாப் புகழை உண்டாக்குவான் என்பதும் என்னு டைய முழு நம்பிக்கை. ஆதலால் நான் நெடுங்காலம் யோசித்து ஒரு முடிவை யடைந்தபின் இந் நாட்டில் வாழும் தக்க பெரியோர்களோடு கலந்து பேசியும் ஒரு தீர்மானத்திற்கு வந்துள்ளேன். அத் தீர்மானம் யாதெனில் எனக்குப் பின் என் அரசாட்சி என் மக னுக்கே உரிய தென்பதே. நீங்கள் இப்பொழுது என் னிடம் கூறியவற்றால் என் கருத்திற்கு இணங்காதவர் கள் என்பதையு முணர்ந்தேன். என்னிடம் என்றும் இவ்வாறு எதிரமர்ந்து பேசத் துணிவுகொள்ளாத என் தமையன் மைந்தர்கள் இன்று உங்கள் முன்னிலை யில் என் பக்கலில் அமர்ந்து அஞ்சாது பேசியதை நினைக்குமிடத்து என் மனம் கலக்க மடைகிறது. அவர்களுக்கு அத்தகைய தன்மை இயல்பாக வுண் டான தல்ல என்பதே எனது துணிபு. என் தமை யன் மகன் கூறினவற்றையும், நீங்கள் கூறினவற்றை றையும் நான் சற்று ஆராய்ந்து பார்க்குங்கால் என் னைச் சோதித்து என்னிடமிருந்து ஒரு திடமொழி பெறுவதற்குச் செய்த சூழ்ச்சி யென்றே நினைக்கின் றேன். ஏன் என்றால் இது காலம் வரை புலிகேசி யும், மற்றவர்களும் என்னுடன் அமர்வதற்கே அஞ்சு வார்கள். மற்று என்னோடு பேசவேண்டுமென்றால் எவ்வாறு பேசுவார்கள் என்பதை நீங்களே யூகித்

துக்கொள்ளலாம். புலிகேசி என்னுடன் தன் உரிமையைப்பற்றிக் கேட்கவேண்டு மென்னும் விருப்புடையவனு யிருந்தால் என்னைத் தனியாகக் கண்டு கேட்டிருக்கக் கூடும். நீங்கள் எல்லோரும் வந்திருப்பதுணர்ந்து அவன் தம்பிமார்களுடன் வந்து எனக்குச் சரியாக வமர்ந்து தன் உரிமையை வழங்க வேண்டும் என்று கேட்டதை நினைக்குங்கால்——ஆ——உம்——தெரியாதா? நான் என்ன முழு மூடனு?..........ஏதோ துராலோசனை மந்திரிகள் கூடியுள்ளனர்....நல்லது இருக்கட்டும். முறை தவறியும், நிலைதவறியும் நடந்தால்........முடிவில் அடைவது என்ன என்பதைத் தானே நன்குணர்ந்து கொள்ளுகிறன்............அன்பர்களே! என் வீண் பேச்சு. என்னுல் தான் இச் சாளுக்கிய இராஜ்ஜியம் நிலைபெற்றிருக்கின்றது என்பது என் கொள்கை. அதனை எவரும் மாற்றுவதற் கியலாது. என் தமையன் இறந்த காலத்தில் நான் அல்லாது வேறு யாவனேனும் அரசனுய் அமர்ந்திருந்தால் காலசூரி ராஜ புத்திரர்களும், கொங்கணத்தவரும், கடம்பருமாகச் சேர்ந்துகொண்டு இச் சாளுக்கிய இராஜ்ஜியத்தைச் சின்னு பின்னமாக்கி யிருப்பார்கள் என்பது திண்ணம். நான் அரசனுக வந்ததினுற்றுன் இவ் விராஜ்ஜியம் சிதறுராமல் விஸ்தாரப்படும்படியும், பகைவர்கள் அழிந் தொழியும்படியும் செய்தேன். ஆதலால் நானும் என் வம்சத்தாருமே இந் நாட் டரசுரிமைக்குப் பாத்தியப்பட்டவர்கள். அவ்வாறல்லாது மற்றவர்கள் தமக் குரிமை யிருக்கின்றதென்று வருவ

யைக் கண்டு அவர்கட்குப் பயந்து என்னுரிமையை யிழந்து நிற்பதற்கு என் மனம் ஒருபொழுதும் சம்மதியாது. அவ்வாறு எவரேனு முளராயின் என் முழு வலிமையையும் அவர்கள் மூலமாக உலகத்தார்க்கு விளக்கிக் காட்டுவேன்............நீங்கள் செல்லலாம்'' என்று நயமும் பயமும் தோற்றும்படி யுரைத்துச் சரேலென மங்கலீசன் அவ்வறைவிட்டகன்றான். மற்றவர்களும் எழுந்து அவ்வறையை விட்டு அகன்றனர். புலிகேசி தன் சிற்றப்பன் கொண்டுள்ள பொறாமையையும், மூர்க்கத்தனத்தையும், பகைமையையும் அறிந்து மிக்க சினங் கொண்டான். புலிகேசி எப்பாடுபட்டாயினும் தன் உரிமையைத் தான் பெறாது உயிர் வாழ்வதில்லை யென்னும் உறுதியை மனத்திற் கொண்டான்.

## 7. மங்கலீசன் வீழ்ச்சி

கி. பி. 608-ம் வருஷத்தில் சாளுக்கிய இராஜ்ஜிய மெங்கும் பெருகிக் குழப்பமாகவே யிருந்தது. ஒருபக்கம் மங்கலீசனும் அவன் துணைவர்களும் மங்கலீசன் மைந்தனுக்கு அரசாட்சியை யளிக்க வேண்டு மென்றும், புலிகேசியும் அவன் தம்பிமார்களும் அரசுரிமை பெறுதற் குரியவர்கள் அல்லரென்றும் கூறி வந்தனர். ஒருபக்கம் தக்க பெரியோர்களும், தன முடையோர்களும், நாட்டின் நன்மையையே நாடுவோரும், அறநெறியில் நடப்போருமாய்க் கூடி 'மங்கலீசன் புலிகேசியும் அவன் தம்பிமார்களும் இளையராய் இருந்தமையினால் அவர்களைக் காப்பாற்றவும், அவர்கள் தக்க பருவம் அடையும்வரை அரசாளவுமே அரசனாக்கப் பட்டான். அவர்கள் தற்போது தக்க பருவ முடையோர்களா யிருத்தலின் அவர்களுக்கு அரசாட்சி யளிக்கத் தகுந்தது' என்று குடிகளுக்குப் போதித்து வந்தனர். இதனால் குடிகளிற் பலர் புலிகேசி பக்கமும் சிலர் மங்கலீசன் பக்கமுமாகப் பிரிவு பட்டனர். இந்நிலை மங்கலீசனுக்கு மிக்க வருத்தத்தைத் தந்தது.

புலிகேசியும் அவன் தம்பிமார்களும் அரண்மனையை விட்டகன்றதை மங்கலீசன் நன்றாய் உணர்வான். அவர்களுக்கு அந்நகரில் வாழும் சிறந்தோர்களும் மற்றோர்களும் துணையா யுள்ளார்கள் என்பதை நன்கறிந்திருந்தான். எவ்வாறாயினும் புலிகேசி ஜனங்

களின் துணைவலி கொண்டு சேனையைத் திரட்டித் தன்னை எதிர்த்து தன் உரிமையை நிலை நாட்டிக் கொள்வான் என்பது புலப்படாமற் போகத் தில்லை. என்றாலும் அரசாட்சியைத் தன் மைந்தனுக் கன்றி அவனுக்கு அளித்து விட மனமும் இடங்கொடுக்க வில்லை. மங்கலீசன் மனத்தில் புலிகேசியினிடத்தில் கொண்ட பகைமை முதிர முதிர அவன் அறிவிழந்தவனானான். எத்தகையாராயினும் தனக்கு விரோதமாக நடக்கத் துணிந்தனராயின் அவர்களைத் தக்கவாறு ஒறுத்தலே ஏற்புடைத்து என்று துணிந்து, அவ்வண்ணமே செய்யும் படித் தன் துணைவர்களுக்கு முழு அதிகாரமும் அளித்தான். சிக்க வொறுக்கத் துணிந்தால் ஒருசமயம் தன்டனைக்கு அஞ்சி அவன் பக்கல் உள்ளார தன் பக்கத்தில் சாரினும் சாருவர் என்று நினைத்துத் தான் அவ்வாறு தன் துணைவர்களுக்கு அதிகாரம் அளித்தான். அவ்வாறு நினைத்தது தவறென்பதைப் பின்னே தான் மங்கலீசன் உணரலானான். மங்கலீசன் துணைவர்களுக்கு அக்கால நிலை பெரும் பயனளித்ததென்று கூறுவானேன்? அவர்களில் ஏழையாயிருந்தோர் தனவந்தராயினர். அற்பராயிருந்து அன்றைப் பாட்டை யன்றன்று கழித்து வந்தோர் அமைச்சரும் அரசாங்க உயர்ந்த உத்தியோகஸ்தருமாய் விளங்கினார்கள். தம்மை முன்பு பழித்துத் துன்புறுத்தியவர்களைப் பழிக்குப் பழி வாங்கத் தருணமும் அவர்களுக்கு வாய்த்தது. அரசனோ அவர்களுக்குப் பூரண அதிகாரம் கொடுத்துள்ளான். தாங்கள் யாது புரியி

னும் அரசன் தங்களை ஒன்றும் செய்யான் என்பது அவர்களுக்குத் தெரியும். அதிலும் அரசன் எடுப்பார் கைப் பிள்ளையாய் அவனைப் புகழ்ந்து சார்ந்து பேசுப வர்களிடத்தில் நம்பிக்கை வைப்பவனு யிருக்கிறன் என்பதை யறிந்திருந்தனர். அதிலும் அவன் அறிவி ழந்து விட்டான் என்பதை அரசன் தம் கைவலையில் சிக்குண்ட காலத்திலேயே யுணர்ந்தவர்கள். இத்தகை யார் நாட்டில் என்ன என்ன செய்திருப்பார்கள் என்பதை வாசகர்கள் தாங்களே யூகித் தறியக்கூடும். அவர்கள் வைத்ததுதான் சட்டமாகக் கி. பி. 608-ஆம் ஆண்டில் இருந்தது.

புலிகேசி, என்று தன் உரிமையை வழங்க வேண்டும் என்று சில பெரியோர்களை வைத்துக் கொண்டு தன் சிற்றப்பனைக் கேட்டானே, அன்றே அரண்மனையை விட்டுத் தம்பிமார்களுடன் வெளியில் வந்து விட்டான். மங்களீசன் தன் உயிரைப் போர்க் களத்தில் போக்கினு லல்லது தான் உயிரோடு இருக் கும்வரை அரசாட்சியைத் தன் மைந்தனுக்கன்றி வேறெவனுக்கும் கொடான் என்பதைப் புலிகேசி யுணர்ந்து கொண்டான். அவன், தான் நேரில் தன் னுரிமையை வழங்கும்படிக் கேட்டுவிட்ட படியால் தன்னையும் தன் தம்பிமார்களையும் முற்றிலும் விரோதி களாகக் கொள்வதோடு இடையூறுகளை யியற்றவும் மங்களீசன் துணிந்து விடுவான் என்பதை அவன் அன்று கூறிய சொற்களால் அறிந்தான். தான் அரண் மனைக்குள் இருந்தால் தன் உரிமையைத் தான் பெறு தல் இயலாது என்பதை யுணர்ந்தே தம்பிமார்க

ளுடன் புலிகேசி அரண்மனையை விட்டு வெளியே வந்தான். அவன் அவ்வாறு வெளியே வந்தது மங்களீசனுக்கு அச்சத்தையும் அதைரியத்தையும் உண்டாக்குவதாயுமிருந்தது. மற்றும், அவ் வருகை நாட்டில் நடப்பவற்றைத் தெரிந்து கொள்ளவும், குடி-ஜனங்களைத் தன் வயப்படுத்தவும், பிறவற்றிற்கும் புலிகேசிக்கு அநுகூலமாயிற்று.

ஜயஸிம்மனும், விஷ்ணு வர்த்தனனும் புலிகேசி கூறியபடி அவனுக்குத் துணையாயிருந்து வந்தனர். புலிகேசியும் தன் தம்பிகளைக் கூப்பிட்டுத் தான் எண்ணுவதைக் கூறி அவர்கள் கருத்தை உணர்ந்து, அவர்களும் ஒருப்பட்டிருந்தாலல்லது தானாகயாதொரு கருமத்தையும் செய்யத் துணியான். ஆகவே, சகோதரர் மூவரும் ஒருப்பட்ட மன முடையராய் வாழ்ந்தனர். 'ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு' என்பதும், 'சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை' என்பதும், 'உடன் பிறப்பில்லா உடம்பு பாழ்' என்பதும் அவர்களை நோக்கிய பின் கூறப்பட்டனவோ என்று ஐயுறத் தகும்படி மூவரும் ஒற்றுமையாயிருந்தனர். 'ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே' என்பது அவர்கள் மனத்தில் செவ்வையாய்ப் பதிந்திருந்தது. இராமபிரான் ஒத்த அன்பினையும், ஒற்றுமையையும் உடைய தம்பியான இலக்குமணனைப் பெற்றதால் சிறப்புற்றான். ஆனால் புலிகேசி இராமனை அவ்விதத்தில் வென்று விளங்கினான் என்பது பொய்யாகாது. ஒத்த அன்பும் ஒற்றுமையையுமுடைய விஷ்ணு வர்த்தனன், ஜயஸிம்மன் ஆகிய சகோதரர் இருவரைப்



பல்லவன் கட்டிய காஞ்சீபுரம் சிவன் கோயில்.

பெற்றிருத்தலால் இராமனைப் புலிகேசி வென்று விளங்கினான் என்று கூறினோம்.

புலிகேசி தன் தம்பிமார்களோடும் அரண்மனையை விட்டு வெளியே வந்ததும் சில தனவந்தர்கள் தகுந்த இட முதலியன வளித்தனர். அம் மூவரும் அவ்விடத்தில் தங்கி யிருந்து கொண்டு, மேல் நடக்க வேண்டி யிருக்கும் காரியங்களைச் சிந்திப்பாராயினர். அவர்கள் தங்களுக்குத் துணையாக நிற்கும் பிரபுக்களின் துணை கொண்டு குடிஜனங்களுக்குத் தங்கள் உரிமை யெடுத்து விளக்கிக் காட்டித் தங்களுக்குத் துணை செய்ய வேண்டியது அவர்கள் கடமை என்பதை விபரமாகக் கூறி வந்தனர். அவர்கள் மூவரும் சேனைத் தலைமை வகித்திருந்தமையாலும், சேனை வீரர்களைத் தாம் பழக்கி வந்த நேர்மையாலும் அவர்களைத் தம் வசப்படுத்திக் கொள்ளவும் முயன்றனர். அவ் வேலை அவர்களுக்கு மிக்க சுலபமாகவே முடிந்தது. நாளுக்கு நாள் மங்கலீசன் துணைவர்களின் வேலைகளுக்கு இடையூறுகள் பல நிகழ்வன வாயின. அவர்கள் தங்கள் சூழ்ச்சியை வெற்றியோடு முடித்துக்கொள்ள முடியாதென்பதை யுணர்ந்து புலிகேசியின் பேரிலும், அவனுக்குத் துணை புரிவார் பேரிலும் பழிகளைச் சுமத்தி மன்னனிடம் கூறினார்கள். அவ்வாறு அவர்கள் கூறியது மங்கலீசன் கொண்டுள்ள பகைமையை விருத்தி யாக்கியது.

சாளுக்கிய இராஜ்ஜியத்தில் உண்டாயிருந்த குழப்பத்தைப்பற்றி அந் நாட்டில் மட்டுமன்றி, பிற நாட்டிலும் ஜனங்களுக்குத் தெரிய வந்தது. எக் நாட்

டவரும் மங்கலீசன் செய்கையை வெறுத்தனர். அச் செய்தியை மங்கலீசனும்உணர்ந்திருந்தான். அவனும் அவன் துணைவர்களும் செய்யும் வேலைகள் யாவும் பயனற்றவையாய் முடிந்துவிடும் என்பதை எவ் வாறோ உணரலாயினன். அவனுக்குத் துணை புரிவ தற்கெனச் சுற்றி நின்றவர்களும் தங்கள் செயல்கள் பயன் பெறாமையைக் கண்டு அவனை விட்டு நழுவலா யினர். என்றாலும் அவர்களிற் சிலர் அவனுக்கு ஊக் கங்காட்டி வந்தனர். மங்கலீசன் மன நிலை கூறும் திறத்தினதா யில்லை. கி. பி. 608 லும், கி. பி. 606 லும் அவன் தன்னாட்டில் உண்டான குழப்பத்தை எவ்வாறேனும் நிறுத்தி விட்டுத் தன் வல்லமையாலும், சூழ்ச்சியினாலும் தன் மைந்தனுக்கு அரசாட்சியைக் கொடுத்துவிட மிகவும் முயன்றான். யாவும் பயனற் றவை யாயின. குடிஜனங்களில் பல்லோர் புலிகேசி யின் பக்கத்தைச் சார்ந்து நிற்றலை அவன் அறிந்து கொண்டான். ஜனங்கள் யாதொரு அச்சமு மின்றி நேரிலேயே பழிக்கவும் முன் வந்தனர் என்றால் அவ னுக்கு அந்நாட்டில் ஆதரவு எத்துணை இருந்த தென் பதை யியம்பவும் வேண்டுமோ?

மங்கலீசனுக்குத் தன்னால் எத்தகைய சூழ்ச்சி செய்தும், தன் மைந்தனுக்கு அரசுரிமையை அளித் திட முடியாதென்பதை உள்ளங்கை நெல்லிக் கனி போல அந் நாட்டு ஜனங்கள் விளக்கிக்காட்டினர். அத னால் மங்கலீசன் தான் கொண்ட எண்ணத்தை விட்டு ஒழித்துப், புலிகேசிக்கு அரசுரிமையை யளித்து விட் டாலும் அளித்துவிடலாம் என்ற எண்ணத்தைக்

குடிகள் கொண்ட துண்டு. என்னே அவர்கள் பேதமை! மங்கலீசனே தான் கொண்ட எண்ணத்தை விட்டுவிடுபவன்? தன் சூழ்ச்சிகள் யாவும் பயனற்ற தாயின என்பதை யுணர்ந்த மங்கலீசன் புலிகேசி யையும், அவன் தம்பிமார்களையும் கொன்றுவிடவும் சூழ்ச்சிகள் செய்தான். அவைகளும் பயனற்றுப் போயின. அச் சூழ்ச்சிகள் யாவும் அந் நாட்டு மக் களுக்குச் சிலநாட்களில் வெளியாயின. அதனல் அந் நாட்டுக்குடிகள் மங்கலீசனையும், அவன் மகனையும் முற்றிலும் வெறுக்கலானார்கள். அவர்கள் அவன்பால் நடந்துகொண்ட வெறுப்பை ஆழ்ந்து நோக்கின் ஒரு சமயம் அவன் புலிகேசிக்கு அரசுரிமையைக் கொடா திருப்பானயின், அந் நாட்டுக் குடிகளே அவன்மேல் போர்தொடுக்கவும் முயல்வார்கள்போ லிருந்தது. இதனல் மங்கலீசன் நிலை பரிதபிக்கத் தக்கதா யிருந் தது.

மங்கலீசன் தன் எண்ணங்கள்யாவும் பயனற்றுப் போய்விடின் தான் உயிர் வாழ்தலினும் இறத்தலே சிறந்ததாகும் என எண்ணினன். அதனல் தனக்குற்ற நண்பர்களோடு கூடித் தான் இனிச் செய்யத் தகுவது யாதெனத் தீர்மானம் செய்யத் துணிந்தான். ஒரு நாள் இரவு அரண்மனையில் அவனுக்குற்ற நண்பர்கள் வந்து கூடினர்கள். அவன் அவர்களோடு நெடு நேரம் வரைப் பேசிக்கொண் டிருந்தான். பின் எல்லோ ரும் ஒரு முடிவுக்கு வந்தனர். போரின்றி யாதொரு செயலும் நடைபெரு தென்றும், போர் செய்யத் தொடங்கினல் போரில் சூழ்ச்சிகள் செய்து புலிகேசி

யையும், அவன் தம்பிமார்களையும் நமனுலகத்திற்கு அனுப்பி விடலாம் என்றும், அவ்வாறு செய்து விட்டால் சுலபமாகத் தன் மைந்தனுக்கு மங்கலீசன் அரசாட்சியை யளிக்கக் கூடுமென்றும், அவர்களிற் சிலர் தம் வாக்கு வல்லமையால் எடுத்துக் கூறி மன்னனையும் சம்மதிக்கும்படிச் செய்தனர். மங்கலீசனும் தான் கெடப் போகுங் காலம் கிட்டியுள்ளதைக் கருதாது அவர்கள் கூற்றிற் கிணங்கினன்.

அரண்மனையில் போருக்குச் சேனைகள் தயாரிக்கப்படுதலை எவ்வாறோ புலிகேசிக்குத் துணை செய்யும் பிரபுக்கள் அறிந்து அவனுக்கும், அவன் தம்பிமார்களுக்கு முணர்த்தினர் அதனைக் கேட்ட புலிகேசி தன் சிற்றப்பனுக்கு நமனுலக வாழ்க்கை கிட்டி விட்டதை யுணர்ந்து வருந்தினன். தன் மீது போர் தொடுக்க மங்கலீசன் முயல்கின்றான் என்பதை புலிகேசி யுணர்ந்தும் எவ்வாறு அவன் வாளாவிருத்தல் கூடும்? அதனால் அவனும் சேனைகளைத் திரட்ட முயன்றனன். இத் துறையில் ஜயஸிம்மனும், விஷ்ணுவார்த்தனனும் பெரிதும் பாடு பட்டார்கள். அரசன் சேனையில் ஒருபகுதி புலிகேசியின் பக்கம் சேர்ந்து கொள்வ தாயிற்று. என்றாலும் கடும் போர் நிகழின் என் செய்வதென வுன்னி புலிகேசி புதுச் சேனைகளையும் தயாரித்தனன். இவை யாவும் குடிகளுக்குத் தெரிந்தன. தெரிந்தவுடன் குடிகளிற் பலர் புலிகேசியின் சேனையில் சேர்ந்து கொண்டனர். அவன் அவர்களுக்குத் தன்னாலும், தம்பிமார்களாலும் போர் முறைகளைக் கற்பித்துத் தயார் செய்தான். இவை

யாவும் மங்கலீசனுக்குத் தெரியாமற் போக வில்லை. அந் நிலையினும் அவன் தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்கள் என்பது போல் தன் மைந்தனுக்கே அரசுரிமை வழங்குதல் தகுதியும், நியாயமுமான தென்று கூறி வந்தான். நல்லோர் பலரும், அமைச்சர் பலரும் நன்மதிகளை எடுத்துரைத்தும் யாவும் செவிடன் காதில் ஊதிய சங்குபோல் பயனற்ற தாயின. 'மணலையும் கயிறாய்த் திரிக்கலாம் கயவர் குணமட்டுந் திருப்ப வசமோ' என்று அவர்கள் கூறிக்கொண்டே அவனை விட்டு விட்டு வந்தனர்.

கி. பி. 609-ஆம் வருஷக் கடைசியில் சாளுக்கிய இராஜ்ஜியத்தில் குழப்பமும் அமைதியின்மையும் குடிகொண் டிருந்தன. குடிகள், எப்பொழுது போர் நிகழுமோ என்று அச்சமுடையவர்களாகவே யிருந்தனர். முடிவில் போரும் தொடங்குவ தாயிற்று. போர் தொடங்குவதன்முன் புலிகேசி தூது விடுத்து இனியேனும் தன் உரிமையைத் தனக்களிக்கும்படி வேண்டினன். அது பயனற்றதாகவே, போர் புரியத் துணிவுகொண் டெழுந்தனன். மங்கலீசன் தானும், தன் மகனும் துணைவருமாக இருந்து சேனைகளை நடத்திக்கொண்டு போர்க் களத்தைக் குறுகினர். புலிகேசி சிறிதும் அஞ்சாது தானும், தன் தம்பிமார்களுமாயிருந்து சேனைகளை நடத்திக்கொண்டு போர்க் களத்தை யடைந்தான். இவ் விருவர் போரினையும் காண ஜனங்களும் வந்திருந்தனர். அந் நாட்டுக் குடிகள் எல்லோரும் புலிகேசிக்கு வெற்றியுண்டாக வேண்டுமென இறைவனை இறைஞ்சினர். இருவர்

படைகளும் கைகலந்தன; போரும் தொடங்கிற்று. போர்க்களத்தில் புலிகேசி பொலிந்து தோன்றினன். மன்னன் சேனையாகிய ஆட்டு மந்தைக்குப் புலிகேசி ஓர் அடுபுலி போன்று விளங்கினன். யானையாகிய மங்கலீசனைக் கொல்ல வந்த சிங்கமோ புலிகேசி என்று எல்லோரும் மதி மயங்கினர். கடும் போர் சில நாள்வரை நடந்தது. அப் போரில் புலிகேசியைச் சூழ்ச்சியால் கொல்ல மங்கலீசன் துணைவர்கள் முயன்றனர். புலிகேசியும் அவன் தம்பிமார்களும் அவற்றை யெல்லாம் முன்பே யோசித் தறிந்திருந்த தலினல் அதி ஜாக்கிரதையா யிருந்து மங்கலீசன் துணைவர்களை அந்தகன் உலகிற்கு அனுப்புவித்தனர். கடைசியாக மன்னனும், மன்னன் மகனும் கடைசி நாள் போரில் பட்டொழிந்தனர். போரும் முடிவடைந்தது. புலிகேசியும் அவன் தம்பிமார்களும் வாகை சூடி வெற்றி முழக்கத்தோடு நகருட் புக்கனர். அவர்கள் வருகையைக் குடிகளும் அன்போடேற்றனர். பிறன் பொருள் வெஃகிய பேதையின் கதிதான் என்னே—அந்தோ! பாவம்! பாவம்!!

## 8. புலிகேசியின் வெற்றி மேம்பாடு

கி. பி. 610-வது ஆண்டில் புலிகேசி சாளுக்கிய இராஜ்ஜியத்திற்கு அதிபதியானன். மார்ஸ்டன் துரையும், வின்ஸென்ட் ஸ்மித் என்பவரும் கி. பி. 608-ல் புலிகேசி அரியணை யேறினன் என்பர். பழைய சாஸனங்களை நன்ருக ஆராய்ச்சி செய்தவரும், தக்ஷிண பதத்தின் சரிதையை எழுதியவருமாகிய இராம கிருஷ்ண கோபால் பண்டர்கர் என்பார் கி.பி. 610, கி. பி. 611-ல் அரியணை யேறி யிருத்தல் வேண்டுமென்கின்ருர். வைத்தியா வென்பவர் கொள்கையும் புலிகேசி கி. பி. 610-லேதான் அரசனுனன் என்பதே. இவ்விருவகைப்பட்ட கொள்கைகளுக்கும் இரண்டு ஆண்டுகளே வித்தியாச மாகலின் அவ் வித்தியாசத்தினல் குற்றம் ஒன்று மில்லை. புலிகேசி அரசடைந்ததும் தான் செய்ய வேண்டியவைகள் பலவுளவென வறிந்து கொண்டான். தன் தம்பி மார்களைத் தனக்குத் துணையாக வைத்துக் கொண்டு புலிகேசி அரசு புரிவானுயினன். சாளுக்கிய தேசத்துக் குடிகள் புலிகேசி அரசனுக வந்தைதப்பற்றிக் களி கூர்ந்தனர். மங்கீசனுக்குத் துணை புரிந்தவர்களெல்லாம் இருந்த விடம் தெரியாமல் மறைந் தொழிந்தனர். அவர்களுக்குப் புலிகேசியினல் அவன் அரசனுயபின் யாதொரு துன்பமும் ஏற்படவில்லை.

புலிகேசி தன்னுட்டிற்குப் பல நன்மைகளைப் புரிந்தான். அவன், பல வரிகளைக் குறைத்து ஆறில்

ஒரு பங்கு நிலவரியாக மட்டும் பெற்று வந்தான். நாட்டில் ஆங்காங்கு நீதி மன்றங்களை நிறுவினன். வைதிகப் பிராம்மண மதம் மேன்மையை யடையலாயிற்று. பௌத்த மதமும் பிற மதங்களும் நிலை பெற்று வந்தன. குடிஜனங்களுக்கு இயன்றவளவு நன்மைகளைப் புரிந்த பின் புலிகேசி தன்னிடமுள்ள சேனை பலத்தை நோக்கினன். ஜயஸிம்மனும், விஷ்ணு வர்த்தனனும் புலிகேசியின் சொல் கொண்டு சேனைகளைப் பெருக்கலாயினர். இது நிற்க.

இராஷ்டிர கூட வம்சத்தில் தோன்றிய அரசர்கள் இருவர் இருந்தனர். அவர்கள் சாளுக்கியர்களோடு நீண்ட காலமாகப் பகைமை பாராட்டி வந்தனர். அவ்விருவர்களும் முறையே அப்பாயிகன், கோவிந்தன் என்றழைக்கப் படுவார்கள். அவர்கள் சேனை பலமு முடையவர்கள். அவர்களில் அப்பாயிகன் என்பான் சேனையில் வட கடற்கரை நாட்டுக் குதிரைகள் பல இருந்தன. அவர்கள் இருவரும் புலிகேசி அரசாட்சியை யடைந்ததும் எதிர்த்துப் போர் புரிவதெனப் பேசிக்கொண்டனர். புலிகேசி இளம் பருவத்தினன் ஆதலினாலும், அரியணை யேறி கொஞ்ச காலமே யாயிற் றாதலினாலும் அவனைப் போரில் வெல்வது எளிது என்பது அவ்விருவர்களுடைய கொள்கை. "காற்றுள்ள போதே தூற்றிக் கொள்" என்பதை அவர்கள் நன்குணர்ந்திருந்தார்களாதலால் அப்பாயிகனும், கோவிந்தனும் தம்முள் கலந்து பேசிக்கொண்டு பெருஞ் சேனையுடன் வந்து புலிகேசியை எதிர்த்தார்கள். உலகில் மக்கட்கு உள்ள

தீய குணங்களில் அவா என்பது ஒன்று. இக்குணம் வாய்க்கப் பெற்றுரை அந்தோ! பேய்க் கோட் பட்டார் என்றே கூறிவிடலாம். இக் குணத்தினல் மக்கள் அடைகின்ற தீமைகள் பல. இக் குணத்தைக் கொண்டுள்ள மக்கள் மனம் என்றும் துன்புறுவதாகும். அவர்களுக்குத் திருப்தி என்பதே இராது. எப்பொருளைக் காணினும் அப் பொருளை யடைய விழைவுண்டாகும். அப் பொருளை யடையாவிடிலோ அவர்களுறுந் துயர் அறைதற் கியலாததாகும். "போது மென்ற மனமே பொன் செய்யும் மருந்து" என்பதை அவர்கள் உணர்வதில்லை. அவா என்பது ஆசை, ஆசைப் பெருக்கம், இறங்குதல் என்னும் பொருள் கொண்டதோர் சொல். ஆதலின் அவா எனுங் குணத்தைப் பெற்றுள்ளோர் எத்தகையாராயினும் தம் நிலையினின்றும் இறங்குவர் என்பது திண்ணம். மற்றும், அவாவே பிறப்பிற்கு வித்து. இதனை வள்ளுவர்,

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து"

என்று தெளிவுறக் கூறியுள்ளார். மற்றும், அவா வறுத்தாரே தூய்மையுற்றவ ரென்றும், மெய்ம்மையுடையவர் என்றும், பிறவி யற்றவர் என்றும், நூல்கள் கூறும். அவா வுடையார்க்கோ துன்பத்திற்குமேல் துன்ப முண்டாகும். அந்தோ! இதனை வள்ளுவர்,

" அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
றவாஅது மேன்மேல் வரும்"

என்று தெளிவுறக் கூறியிருத்தலை யுணரமாட்டாமல் உலகில் மக்கள் அவாவாய்ப்பட்டு அலமறுகின்றனரே! உலகில் மக்களாய்ப் பிறத்தலே துன்பமுடையதாகும். உடம்பு முகந்து நின்ற துன்பம் முன்பே செய்து கொண்டதாகும். பின்னும் அவா என்னும் குணத்தாலும் மேன்மேலும் துன்பத்தைத் தேடிக் கொள்ள முயல்வரோ அறிவுடையோர்கள்? புலிகேசி இளையோனா யிருத்தலினால் தம்மை எதிர்த்துப் போர் புரிய அவனுக் காற்றலில்லை என்று மனத்தில் உன்னிக் கோவிந்தனும் அப்பாயிகனும் தம் சேனையோடு சென்று புலிகேசியைப் போரில் வென்று அவன் நாட்டைக் கைப்பற்றிக்கொள்ள வேண்டு மென்னும் அவாவால் போருக் கெழுந்தனரே! என்னே அவர்கள் அறிவு? அரசர்களையு மன்றோ அவா வெனும் பேய் பிடித்தாட்டுகின்றது! அம்மம்ம! அவாவே பிறப்பிற்கு வித்து ஆதலினாலும், அவாவே பிற துன்பங்களுக்கும் ஏது வாதலினாலும், அவாவே ஒருவனது உயர்குணங்களை யொழித்தலினாலும் அதனை அறவே அகற்றி வாழ்வதே மானிடம் பெற்றாரின் பெருநோக்கமாக இருத்தல் வேண்டும்.

புலிகேசி தான் அரியணை யேறியதும் தன் சேனா பலத்தைப் பெருக்கிக்கொள்ள முயன்று வந்தான் என்று கூறினோ மல்லவா? அவன் சேனை நாளுக்கு நாள் பலம் பெற்று வந்தது. இத் தருணத்தில் அப்பாயிகனும், கோவிந்தனும் தங்கள் சேனையோடு வந்து

புலிகேசியை எதிர்த்தார்கள். புலிக் குட்டி பூனைக் கஞ்சுமோ? புலிகேசி அவர்கள் பொருதற்கு வந்ததை நோக்கி ஒரு சிறிதும் மனத்தில் அச்சங்கொள்ளவில்லை. அவர்கள் பொர வந்தது அவனுக்கு உற்சாகத்தையும் ஊக்கத்தையும் உண்டாக்கியது. தன்னாலும் தன் தம்பியர் இருவர்களாலும் பழக்கப்பட்ட சேனையைத் திரட்டிக் கொண்டு இராஷ்டிரகூட அரசர்களான அப்பாயிகனையும், கோவிந்தனையும் முன் சென்று எதிர்த்தான். அவர்கள், அவன் அஞ்சாது எதிர்த்ததை நோக்கி ஆச்சரிய முற்றனர். பின், போர் நிகழ்ந்தது. அவ்விரு இராஷ்டிர கூட அரசர்களும் தம்மால் இயன்றவரைப் புலிகேசியைப் போரில் வெல்ல முயன்றனர். அந்தோ! அவர்கள் முயற்சி வீணாயின. சிங்கக் குருளையை யொத்த புலிகேசி தன் சேனையை வெகு சாமர்த்தியமாய் நடத்திக்கொண்டு சென்று பகைவர்சேனையை முறியடித்து புறங்காட்டியோடும்படிச் செய்தான். என்னே இளஞ் சிறுவனின் வீரத்தன்மை! அந்தோ! அப்பாயிகனது குதிரைப் படை முழுவதும் சிதைந்து சின்ன பின்னமாக இருந்த இடந் தெரியாதபடி ஓடிப் போயிற்று. படை குலைவுற்றதைக் கண்ணுற்ற அப்பாயிகனும் ஓடி ஒளிந்து தப்பினன். கோவிந்தன் சேனையும் முறியடிக்கப்பட்டதால் அவன் தன்னால் புலிகேசியைப் போரில் ஜயித்தற்கு இயலா தென்பதை நன்குணர்ந்தான். அவன் புலிகேசியோடு சமாதானம் செய்துகொண்டு அவன் நட்பினர்களில் ஒருவனும், சிற்றரசர்களில் ஒருவனுமாய்ப் புலிகேசிக்குக் கப்பம் கட்டி வந்

தான். இப் போரினுல், வெற்றி கொண்ட புலிகே சியின் ஆற்றல் அனைவர்க்கும் விளங்குவ தாயிற்று. இப்போர் கி. பி. 610-முதல் கி. பி. 612-க்குள் நடைபெற் றிருக்க வேண்டு மென்று ஊகிக்கப் படுகிறது. புலிகேசி தான் அரசனுன பிறகு முதன் முதல் புரிந்த போர் இஃதே என்று சரித்திர ஆராய்ச்சியினு லறியப்படுகின்றது. கோவிந்தன் என் பான் இந்திர ராஜன் என்பானின் புதல்வனும் தந் திரவர்மன் என்பானின் பெயரனும், கோவிந்தன் முதலாவான் என்பவனு மாவன் என்று அறியப்படு கிறது.

இராஷ்டிர கூடர்களுக்கும் புலிகேசிக்கும் போர் நடந்தது. அப்போர் புலிகேசியின் சேனை மிகுதிப்படு தற்குக்காரணமாயது; அம்மட்டோ டன்றிப் புலி கேசியின் வல்லமையைப் பின் நிலை நாட்டுவதற்கும் காரணமாயிற்று. புலிகேசிக்கும் தன் சேனைகளை மிகு திப்படுத்திக்கொண்டு தன்னை எதிர்க்கும் பகைவர்களை வென்று தன் இராஜ்ஜியத்தை விஸ்தாரப் படுத்திக் கொள்வதோடு தன்னுடைய பெயரையும், புகழையும் நிலைநாட்ட வேண்டுமென்ற எண்ணம் உண்டாகி அஃது அவன் மனத்தில் வேரூன்றிப் பதியலாயிற்று. என்னவே புலிகேசி தன் சேனையை மிகுதிப்படுத்தி யுத்த முறைகளைச் செவ்வையாய்க் கற்றுக்கொடுத் தான். அவன் தம்பிமார்கள் இருவரும் அவனுக் குப் பேருதவி புரிந்தனர். ஆகவே, புலிகேசி யாவ ரும் தன்னை எதிர்த்துப் போரில் வெற்றி கொள் ளாத நிலையை யடைந்தான் என்பது பொய்யாகாது.

அத்தகைய நிலையிலும் புலிகேசிக்குப் பகைவர் பலர் இருந்தனர். அவர்கள் முறையே பனவாசியைத் தலை நகராகக் கொண்டு ஆண்டுவந்த கடம்பர்களும், தற்காலத்தில் மைசூர் என்று விளங்குவதான கங்கவம்சத்தின ராண்டுவந்த சேர தேசத் தரசனை கங்கனும், கொங்காணத்தை ஆண்டு வந்த மௌரியர்களும், ஆவர். மேல் கூறியவர்கள் எல்லோரும் புலிகேசி வலிமையுற்று விளங்குதலைக் கண்டு பொறாமை கொண்டு அவனிடம் பகைமை பாராட்டினார்கள். அவர்கள், புலிகேசி வலிமை பெற்று விளங்குவானாயின் தங்கள் அரசாட்சிக்கு அஃது இடையூறாய் இருக்குமென்று அஞ்சினார்கள். மேல் பாகம் முழுவதும் பகைவர்களாகவே யிருக்கப் புலிகேசிக்குக் கீழ்ப் பாகத்திலும் பகைவர்கள் இருந்தனர். வடக்கிலும் வலிமை பெற்ற பகைவன் ஒருவன் உண்டு. இவ்வாறு நான்கு திக்குகளிலும் பகைவர்கள் இருத்தலை புலிகேசி நன்கறிந்து கொண்டான். அவனுக்கு அச்சம் என்பதே தோன்றவில்லை. தன் தம்பிமார்களின் துணையாலும், தன் சேனை பலத்தாலும், தன் வீரத் தன்மையாலும் நான்கு பக்கங்களிலு முள்ள பகைவர்களையும் வென்று சாளுக்கிய இராஜ்ஜியத்தை நிலைநிறுத்தி விடலாம் என்ற எண்ணமும் உறுதிப்பாடும் அவன் மனத்தைவிட்டு அகலாதிருந்தன. அதனால் தான் இராஷ்டிர கூட அரசர்களை வென்றது முதல் தன் இராஜ்ஜியத்தை நிலைப்படுத்துவதற்கும், பகைவர்களைப் போரில் வெல்லுதற்கு மென்றே தன் சேனையைப் புலிகேசி பெருக்கிக் கொண்டான். ஆண்

டில் இளையனாய் இருப்பினும் க்ஷத்திரிய வரசர் குலத்தில் தோன்றியவனாதலின் வீரத் தன்மை புலிகேசியிடம் குடிகொண் டிருந்தது. அவன் நாட்டு ஜனங்களும் அவனிடம் மிக்க அன்புடையவர்க ளாகவும், அவன் நிலையை நன்குணர்ந்தவர்களாகவும் இருந்தனர். மற்றும் அவர்களும் தங்கள் இராஜ்ஜியத்திற்கு ஏற்பட்டிருக்கும் நிலையை யுணர்ந்து பலவிதத்திலும் புலிகேசிக்கு உதவி புரிந்து வந்தனர். அவர்கள் செய்கை புலிகேசிக்கு ஊக்கத்தையும், தைரியத்தையும், உற்சாகத்தையும், வீரத்தையும் உண்டாக்கியது.

## 9. புலிகேசியும் கடம்பர்களும்

கடம்பர்கள் என்பார் தக்ஷிண பதத்தில் நெடுங் காலமாக இருந்து அரசாளுபவர் ஆவர். அவர்கள் இராஜ்ஜியம் ஏறக்குறைய கிறிஸ்துவின் பிறப்பிற்கு இருநூறு வருடங்களுக்கு முன்னிருந்து, கிறிஸ்துவுக்குப் பின் அறுநூறு ஆண்டுவரை நிலை பெற்றிருந்தது. அதாவது, சற்றேறக்குறைய எண்ணூறு ஆண்டுகள் வரையிலும் கடம்பர்கள் தக்காணத்தில் சிறந்து விளங்கி யிருந்தனர் என்னலாம். அவர்கள், புராண காலத்திலேயே தக்காணத்தில் புகுந்து திராவிடர்களோடு கலந்த ஆரியர்கள். அவர்கள் வம்சத்தினர் குடகு தேசத்தில் வசித்தவர் என்று தெரிகிறது. கடம்பர்கள் கன்னடம், துளுவம், குடகு, (கூர்க்கி) முதலிய மொழிகளைப் பேசி வந்தனர். அவர்கள், தங்கள் வீட்டின் முன் கடம்ப மரத்தை வைத்துப் பெரிதும் போற்றி வந்தமையினால் கடம்பர்கள் எனப்பட்டார்கள். அவர்கள் இராஜ்ஜியம் மேற்கு மலைத் தொடர்ச்சிக்குக் கிழாகவும் மைசூருக்கு மேல் புறமாகவும் வடகன்னடம், தென்கன்னடம் என்ற ஜில்லாக்களைத் தன்னிடத்துடையதாகவும் இருந்தது. அவர்களுக்குத் தலைநகர் வைசயாந்தி என்னும் பனவாசி நகரமாகும்.

கி. பி. 610-ல் சிம்மாசனம் ஏறிய புலிகேசியின் மேல் அப்பொழு திருந்த கடம்ப வரசனுக்குப் பகைமை யிருந்தது. ஏனெனில், கீர்த்தி வர்மனை புலிகேசியின் தந்தை கடம்பர்களைத் தலையெடுக்க

வொட்டாமல் தடுத்து வந்ததே காரணம் ஆகும். புலிகேசி அரசனனதும் தன் பகைவர்களான அப்பாயிகன், கோவிந்தன் ஆகிய இருவர்களைப் போரில் வென்றதைக் கடம்ப வரசன் அறிந்தான். சாளுக்கியர் தக்காணத்தில் வலி பெற்றிருத்தல் அவன் மனத்திற்குப் பொருந்திய தன்றாயது. புலிகேசியால் எக்காலத்திலும் தனக்கு அபாயம் உண்டாகும் என்பதை அவன் நன்குணர்ந்திருந்தான். ஆதலின் எவ்வாறேனும் சாளுக்கியர்களை எதிர்த்து அவர்கள் வலியைக் குன்றச் செய்தலே ஏற்புடைத்தாயதொரு கருமம் என்று எண்ணினன். புலிகேசியை மௌரியர்களும், கலிங்கரும், கோசலரும், கொங்கணரும் பகைத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கடம்ப வரசன் உணர்ந்திருந்தான். ஆதலினல்தான் புலிகேசியை எதிர்த்துப் போராடுதலே தகுதி என்று அவன் தன் மனத்துள் எண்ணினன். புலிகேசி இளம் பருவத்தினன் ஆதலாலும், பகையரசர்கள் பலருள்ளார் என்பதை அவன் உணர்ந்தவன் ஆதலாலும், தான் அக்காலத்தில் அவன் தந்தை ஆணைக் குட்பட்டதுபோல் அடங்கியிராது மீறி நடந்தால் அவனல் ஒன்றும் செய்ய வியலாதென்றும், ஒருசமயம் போருக்குவரின் எளிதில் வென்று விடலாம் என்றும் கடம்ப வரசன் மனத்துள் எண்ணிக்கொண்டு சாளுக்கிய வரசர்களுக்குக் கீழ்ப்படிந்திருந்தமையை மீறி நடக்கலானன்.

அச் செய்தி புலிகேசிக்கு எட்டிற்று. அவன் மிகுந்த சினங் கொண்டான். தான் இளம் பருவத்தினனு யிருத்தலினனும், தனக்குப் பகைவர் பலர்

இருத்தலினாலுமே கடம்ப வரசன் ஆணையை மீறி நடக்கவுந் துணிந்தனன் என்பதைப் புலிகேசி நன்றாக அறிந்து கொண்டான். பின், சில தூதுவர்களைக் கடம்ப வரசனுக்கு நல்லுரை பல நவிலும்படி யனுப்பினான். அச் செய்கை பயனற்ற தாயிற்று. புலிகேசிக்குச் சினம் மிகுந்தது. உடனே தன் சேனைகளோடு புறப்பட்டுச் சென்று கடம்ப வரசனைப் போரில் கலக்கினான். போரில் கடம்ப வரசன் தோற்றுப் போகவே புலிகேசி அவனைத் தனக்குப் பகுதிப் பணம் கட்டி வரும்படித் திட்டம் செய்து வெற்றி யோடு தன் நகர்க்கு மீண்டனன்.

## 10. புலிகேசியும்—மௌரியர்களும்

புலிகேசி கடம்பர்களை வென்று வந்தானேனும் அவன் அமைதியுடன் அரசாட்சி செய்ய முடியவில்லை. ஏனெனில் சாளுக்கிய இராஜ்ஜியத்தை அடியோடு தொலைத்துவிட வேண்டுமென்று கிளம்பிய சாளுக்கிய குலப் பகைவர் பலர் இருந்தமையே அதற்குக் காரணம் ஆகும். கடம்பர்கள் தொல்லை ஒழிந்ததும் புலிகேசிக்கு மற்றொரு தொல்லை ஏற்பட்டது. அதாவது, கொங்காணத்து மௌரியர்கள் புலிகேசியை எவ்விதத்திலேனும் அழித்துவிட எண்ணிப் போருக்கெழுவாராயினர். புலிகேசி வீரத்தில் குன்றாதவனாய்ச் சேனைகளைத் திரட்டிக்கொண்டு அமர்க்களம் நண்ணினன். புலிகேசியின் சேனா வீரர்கள் களிகொண்ட உள்ளத்தராய், எத்தகைய பகைவர்கள் எதிர்ப்பினும் அச்சமடையாமல், மறப் பண்பில் சிறிதும் குன்றாதவராய்ப் போர் புரிந்தனர். அந்தோ! பாவம், புலிகேசியின் திறமையை அழிக்கப் புகுந்த கொங்காணத்து மௌரிய மன்னன் தன் வலியிழந்தது மன்றிப் புலிகேசிக்குக் கப்பங் கட்டும்படியும் நேர்ந்தது. அம்மட்டோ! புலிகேசி மௌரிய மன்னனை அம்மட்டோடு நிறுத்தவில்லை. மேற்குக் கடற் கரையில் கொங்காணத்திற்குத் தலைநகராய் விளங்கிய பூரி என்னும் நகரினைப் புலிகேசி நூற்றுக் கணக்கான கப்பற் படையோடுஞ் சென்று முற்றுகையிட்டு அதனைத் தன் கைவசப் படுத்திக்கொண்டான். பூரி என்னும்

அந் நகர் மேலைக்கடற் கரையின் தலைவி என்றும், மேற்குக் கடற்கரையின் இலக்குமி என்றும் சிறப்பித்துக் கூறப்படுவ தாகும். இவ்வாறு கடம்பர்களையும், மௌரியர்களையும் வெற்றி கொண்டது மன்றிச் சேர நாட்டிலும் பிரவேசிக்க லாயினன். மலையாளத்தில் ஒரு பாகத்தையும், மைசூரில் ஒரு பாகத்தையும் கொண்டு விளங்கிய சேர நாட்டைக் கங்கா குலத்தவர் ஆண்டுவந்தனர். அவர்களையும் புலிகேசி தாக்கவே, சேர நாட்டுக் கங்க வரசன் புலிகேசியோடு நட்புடையவ னானன். ஆகவே ஒருவாறு மேற்குப் பாகத்திலும், சிறிது தெற்கிலு முள்ள பகைவர்களை எதிர்த்து வென்றும், நட்புக் கொண்டும் தனக்கு அமைதியை யுண்டாக்கிக் கொண்டான். இதனல் சாளுக்கிய ராஜ்ஜியம் மேற்கிலும் தெற்கிலும் பரவலாயிற்று. பின்,வெற்றியோடு தன் தலைநகரான வாதாபியைப் புலிகேசி வந்தடைந்தான். புலிகேசிக்கு இக் காலங்களில் எல்லாம் அவன் தம்பிமார்கள் பெருந் துணை புரிந்து வந்தனர். இவ் வெற்றிகளால் புலிகேசிக்குத் தேசம் பரவலானதோடு பலமும், வருவாயும் அதிகரித்தது. அதனல் புலிகேசி பின்னும் தனக்குள்ள பகைவர்களைப் போரிற் கண்டு, மலைந்து வென்று தன் இராஜ்ஜியத்தைப் பரவும் படிச் செய்ய எண்ணங் கொண்டான். அவன் சேனைகளும் மிக்க பலத்தைப் பெற்றனவாயும், வெற்றிக்கு மேல் வெற்றியாகப் பெற்று வந்ததினலேயும், சிறிதும் சலியாமல் அவன் விருப்பத்தை நிறைவேற்றுதற்குத் தக்க நிலையில் இருந்தன. புலிகேசியின் தம்பிமார்களும் சிறி

தும் மன வேற்றுமை யின்றிப் புலிகேசிக்கு உதவி புரிந்து வந்தார்கள். ஆதலால் அவன் தான் கொண்ட எண்ணத்தை நிறைவேற்றுவதும் எளிதாக விருந்தது. வாதாபி நகரத்துக் குடிகளும், சாளுக்கிய இராஜ்ஜியக் குடிகளும் புலிகேசியிடம் அன்பாயும், ஒற்றுமையாயும், உதவி புரிபவர்களாயும் இருந்தார்கள். குடிகளின் ஒற்றுமையும், சேனைகளின் பலத்தையும், நற்காலத்தையும், வீர திரத்தையும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற மன்னன் ஒருவன் நினைத்தது புரிதல் அற்புதமாமோ? அல்லது அக்கருமம் இயலாததாகி விடுமோ?

# 11. இலாட கூர்ஜ்ஜர மாளவம்

இலாடம் என்று கூறப்படுவது வட கூர்ஜ்ஜர நாட்டிற்குப் பெயர். தக்ஷிண கூர்ஜ்ஜரத்தைக் கூர்ஜ்ஜரம் என்றே அழைப்பது வழக்கம். புலிகேசி தன்படைகளைத் திரட்டிக் கொண்டு சென்று அவ் விரு தேசத்தார்களையும் எதிர்த்தான். அவர்களும் சாளுக்கியர்களே எனினும் அவர்கள் வம்சம் வேறு. அவர்கள் புலிகேசியோடு போர் புரிய வலியற்றவர்களாய் அவனைத் தமக்குத் தலைவனாகக் கொண்டு கப்பங் கட்டி வருவதாக ஒப்புக்கொண்டனர். இதற்குள் மாளவ தேசத்து மன்னன் புலிகேசியோடு பகை கொண்டு போருக் கெழுந்தான். புலிகேசி சிறிதும் அஞ்சாது தன் சேனைகளை அழகாக நடத்திக்கொண்டு சென்று மாளவ மன்னனைப் போரில் புறங்காட்டி ஓடும்படிச் செய்தான். பின், வெற்றியுடன் புலிகேசி தன்னூர்க்குத் திரும்பினன்.

சாளுக்கிய ராஜ்ஜியம் மேற்குக் கடற்கரை யளவும் பரவலாயிற்று. மேற்கில் தனக்குப் பகைவர்களில்லை என்னும் மன நிம்மதியை புலிகேசி யடைந்தான். ஆனால் புலிகேசி கவலையற்ற மனத்தோடு இருக்கமுடியவில்லை. ஏனெனில் சாளுக்கிய குலப் பகைவர்கள் கிழக்கிலும், தென்கிழக்கிலும் இருந்தனர். அவர்களோ குலப் பகைவர்களாதலின் எப்பொழுதும் சாளுக்கிய ராஜ்ஜியம் துன்பப்பட்டிருந்ததைப் புலிகேசி யறிவான். அதனால் தனக்கும் அவர்களால் துன்ப முண்டு என்பதை அவன் மறந்தவன் அல்லன். புலிகேசி அரி

யணை யேறிய பொழுதே, தன் குலப் பகைவர்களை ஒழிக்க வேண்டுமென்ற எண்ணம் அவனுக்கு உண்டு. என்றாலும், ஒரே காலத்தில் அவனால் எவ்வாறு எல்லாப் பக்கங்களிலும் சென்று போர் புரிந்து பகைவர்களை வென்று கவலையற்றவனாய் அரியணையில் அமர்ந்திருக்கக்கூடும். அவ்வாறு புரிதல் எத்தகைய மன்னனாலும் இயலாத காரிய மல்லவோ? மற்றும் குலப் பகைவர்ளோ சிறந்த வலியுடையவர்கள். அவர்களைப் போரில் வெல்வதென்றால் அரியணை யேறிய சில வாண்டுகளில் ஓர் அரசனால் இயன்றதாகுமோ? பகைவர்களை விடத் தான் வலி மிக்குடையோனா யிருந்தா லன்றோ திண்ணமாகப் போரில் பகைவர்களை வெல்லக் கூடும். அதிலும், புலிகேசி தான் அரசாட்சியை யடைவதற்கே போர் புரிய வேண்டிய தாயிற்று. அரசாட்சியைப் பெற்ற பின்னும் போர்களே நிகழ்வதாயின. ஆதலின் புலிகேசிக்குத் தன் குலப் பகைர்களோடு போர் புரிதற்கு மேற்பாக முழுவதையும் வெற்றிகொண்ட பின்னரேதான் அமயம் வாய்த்தது. அத் தருணத்தில் தான் அவன் சேனைகளும் மிகுந்து வலிமை பெற்றன. ஆதலின், அவன் உடனே தன் தம்பி விஷ்ணு வர்த்தனனுடன் பெரும் படையைத் திரட்டிக்கொண்டு கிழக்கு நோக்கிச் சென்றான். சென்றவன் முதலில் மகா கோசல தேசத்துச் சேதி அரசனை (King of Chedhi) எதிர்த்தான். சேதி யரசன் புலிகேசியுடன் பொருதற் கஞ்சினவனாய்க் கப்பங் கட்டுவதாக ஒப்புக் கொண்டான். பின், புலிகேசி சிங்க வரசனான கலிங்க மன்னனைப் போரில் கலக்க எண்ணிப் படைகளோடுஞ்

சென்று கலிங்க நாட்டை முற்றுகை யிட்டனன். அம் மன்னனும் சேதி அரசனைப் போலவே புலி கேசிக்குக் கீழ்ப்படிந்து அவனுக்குக் கப்பங் கட்டுவ தாக ஒப்புக்கொண்டு அவனோடு நட்பாளனாயினன். பின், புலிகேசி, தன் குல வைரியாகிய பல்லவர்களை எதிர்க்க எண்ணினன். அதற்குள் வடவெல்லையை காக்கவேண்டிப் புலிகேசி வடக்கே செல்லவேண்டிய தாயிற்று.

## ஸ்ரீ ஹர்ஷனும் புலிகேசியும்

கி. பி. 620-ல் புலிகேசி, தன் தேசத்தின் வட வெல்லையைக் காக்க வேண்டியவனானன் என்று கூறினேமல்லவா? கிழக்கு நோக்கிச் சென்ற மன்னன் திடீர் என்று தன் ராஜ்ஜியத்தின் வடவெல்லையைக் காக்கவேண்டி வந்தது என்னை யென்று அறிய விருப்ப முண்டாகு மன்றோ? தக்ஷிண பதத்தில் எவ்வாறு சாளுக்கிய மன்னனான புலிகேசி ஒவ்வொரு அரசனை யும் எதிர்த்துப் போர் புரிந்து வெற்றிகொண்டு தன் இராஜ்ஜியத்தைப் பரவச் செய்தானோ அதுபோல் வடக்கிலும் ஓர் அரசன் வடநாட்டிலுள்ள அரசர் களைப் போரில் வென்று தன் ராஜ்ஜியத்தைப் பரவச் செய்தான். அவனே புலிகேசியின் ராஜ்ஜியத்தையும், மற்றும் தக்ஷண பதத்திலுள்ள ராஜ்ஜியங்களையும் வென்று, தன் ராஜ்ஜியத்தோடு சேர்த்துக்கொள்ள வேண்டு மென்று படையெடுத்து வந்தான். அப் படையெழுச்சியைத் தடுக்கவேண்டியது புலிகேசி யின் முதற் கடமை யாயிற்று. இல்லையேல், தான் இத்துணைக்காலம் கஷ்டப்பட்ட தெல்லாம் அவமாவ தோடு தானும் பிறனுக்கு அடங்கி நடக்க வேண்டிய தாய்விடும். அவ்வாறு தனக்குக் குறைவு நேரிடா திருக்கவே புலிகேசி வடவெல்லையைக் காப்பதற் கென விரைந்து சென்றான்.

வடநாட்டில் ஆரிய மன்னர்கள் பலர் இருந் தனர். அவர்களுள் ஒருவன் ஸ்ரீ ஹர்ஷன். ஸ்ரீ ஹர்

ஷன் சரிதையைத் தனிக் கட்டுரை நூலில் காண்பீர்கள். ஆதலின் வேண்டுமளவும் சுருக்கி வரைவாம்.

வடநாட்டில் சதத்துரு என்னும் நதிக்கும் யமுனை நதிக்கும் இடையில் ஒரு பெருந் தேச மிருந்தது. குப்த வம்சத்தினர்கள் வட இந்தியாவில் சிறப்புற்று விளங்கிய காலத்தில் சதத்துரு நதிக்கும் யமுனை நதிக்கும் இடைப்பட்ட பாகத்தைக் குப்த அரசனுக்குக் கீழ்ப்பட்டிருந்த சிற்றரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அவனைப் பிரபாகர வர்த்தனன் என்று அனைவரும் அழைத்து வந்தனர். அவன் வைசிய குலத்தவன். அவன் தாயார், குப்த வம்சத்தைச் சேர்ந்தவள். அவன் அரசனானதும் க்ஷத்திரிய இராஜ புத்திரனைப் போல விளங்கினன். அவன் சூரியனை ஆராதித்து வந்தனன். அவனுக்கு ஸ்தானேஸ்வரம் (Thaneswar) என்ற பழைய குருக்ஷேத்திரம் தலைநகராயிற்று. குப்தர்களுக்கு அடங்கிய சிற்றரசனை பிரபாரக வர்த்தனன் தக்க சமயம் பார்த்திருந்து குப்த ராஜ்ஜியம் குலைவுற்ற காலத்தில் அத்தேசத்தைத் தன்னதாக்கிக் கொண்டு யாவருக்கும் கீழ்ப்படிதலின்றித் தனியரசனானன். இவ்வாறு பிரபாகர வர்த்தனன் தனி யரசனானது கி. பி. ஆறுவது நூற்றுண்டின் இறுதியிலாகும்.

பிரபாகர வர்த்தனன் தனி அரசனானதும் பாஞ்சாலத்தின் (Panjab) வட பாகத்திலிருந்த ஹூணர்களோடு (Huns) போர் புரியவேண்டிய தாயிற்று. மற்றும், தெற்குப் பாகத்தில் இராஜபுதனத்தின் மேல்பாகத்திலிருந்து கூர்ஜ்ஜரர்களும்(Gurjara) போ

ருக்குக் கிளம்பினர். ஆகவே வடக்கிலும் தெற்கிலும் சென்று பிரபாகர வர்த்தனன் போர் புரிந்து வெற்றி கொண்டான். பிரபாகர வர்த்தனன் தன் மனைவி யசோமதியோடு செவ்வனே அரசியல் நடத்தி வந்தான். அவனுக்கு இரு மைந்தர்களும் ஒரு புத்திரியுமுண்டு. அவர்கள் பெயர் இராஜ்ஜிய வர்த்தனன், ஸ்ரீஹர்ஷன், இராஜ்ஜியஸ்ரீ என்பதாகும். பிரபாகர வர்த்தனனுக்குப் பின் இராஜ்ஜிய வர்த்தனன் அரசனானான். இராஜ்ஜிய வர்த்தனனுக்குப் பின் கி. பி. 606 ல் அரசனானவனே ஸ்ரீஹர்ஷன் என்பவனாவன்.

பிராபகர வர்த்தனன் இராஜ்ஜியஸ்ரீயைக் கனோஜ் அரசனான கிராகியவர்மனுக்கு மணஞ்செய்து கொடுத்திருந்தான். அக்காலத்தில் வங்காளத்தை ஆண்டு வந்தவன் சசாங்கன் என்பவன் ஆவன். அவன் கிராகிய வர்மனுடன் பகைமை பராட்டி வந்தவன். ஆதலால் தக்க தருணம் பார்த்து கன்னோஜ் அரசனை எதிர்த்துப் போராடி அவனைப் போரில் கொன்றான். அத்தருணத்தில் இராஜ்ஜிய வர்த்தனன் ஹூணர்களுடன் போர் புரிந்து கொண்டிருந்தான். ஹர்ஷன் தானே சுவரத்தில் இருந்தனன். ஹூணர்களை வென்று வந்த இராஜ்ஜிய வர்த்தனன் தன் தங்கையின் கணவன் சசாங்கனால் போரில் கொல்லப்பட்டான் என்பதைக் கேள்விப் பட்டனன். மற்றும், சசாங்கன் இராஜ்ஜியஸ்ரீயைச் சிறையாகப் பிடித்துச் சென்று அவளுக்கு இருப்பு விலங்குகளைக் கால்களிலும் கைகளிலும் அணிவித்துச் சிறையில் வைத்துள்ளான் என்பதையுங் கேட்டான். இராஜ்ஜிய வர்த்தனனுக்

குண்டாய சினத்திற்கு அளவேயில்லை. தன் தங்கையின் கணவனைக் கொன்றவனைத் தான் எவ்வாறேனும் கொன்று பழிக்குப் பழி வாங்குவதோடு தங்கையையும் சிறையினின்றும் விடுவிக்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான். ஹர்ஷனைத் தானேசுவரத்தை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக் கொள்ளும்படிச் சொல்லிவிட்டுத் தான் பெருஞ் சேனையைத் திரட்டிக் கொண்டு வங்காளத்தை நோக்கிச் சென்று சசாங்கனைப் போரில் கலக்கினான்.

இராஜ்யஸ்ரீ சில தோழியர்களுடன் சிறை பிடிக்கப்பட்டாள் அல்லவா? அவள் தன்னுயிர்த் தோழியர்களுடன் சிறைச்சாலையில் இருந்து வருங் காலத்தில் தனக்குற்ற கேட்டினை எண்ணி எண்ணி மனம் புண்ணானாள். கணவன் இறந்ததை நினைந்து நினைந்து வருந்தினாள். கணவனுக்குப் பின் தான் உயிர் வாழ்தல் தகுதியன்றென்பதை யுணர்ந்தாள். எவ்விதத்திலாவது சிறைச் சாலையினின்றும் தப்பி யோடிவிட வேண்டு மென்று கருதினாள். இராஜ்யஸ்ரீ சிறந்த கல்வியுடையவள். மற்றும், அவள் பௌத்த மத நூல்களைச் செவ்வனே கற்றறிந்தவள். அவளுக்கு மதக் கோட்பாடுகளிலும், பௌத்த சமயத்திலும் இருந்த நம்பிக்கையும், விசுவாசமும் மற்றெவருக்கும் இல்லை யென்றே கூறிவிடலாம். ஆதலால், தன் கணவனை யிழந்தும், தன் மானத்தை யிழந்தும், தான் சிறையாகப் பிடிக்கப்பட்டும் உயிர் வாழ அவள் விரும்ப வில்லை. ஆனாலும் தான் சிறைச் சாலையிலேயே உயிரை விட்டு விடவும் துணியவில்லை.

விதத்திலாவது தான் சிறையினின்றும் தப்பிச் சென்று உயிர்விடவே அவள் துணிந்தனள். அவளுக் குற்ற தோழிகளும் அவள் கொண்ட கருத்திற்கு அனுகூலமாகவே துணை புரிவாராயினர். அவர்க ளனைவரும் சிறைமீட்சி யடையத் தக்க தருணத்தை நாடி யிருந்தனர்.

இராஜைய வர்த்தனன் பெரும் படையுடன் பழிக்குப் பழி வாங்கும் பொருட்டாக வந்து சசாங் கனை எதிர்த்தான் என்று கூறினே மல்லவா? அவ் வாறு அவன் எதிர்த்தது சசாங்கனுக்குத் திகைப்பி னையேனும் ஆச்சரியத்தையேனும் உண்டாக்கவில்லை.

சசாங்கன் தன்னை இராஜைய வர்த்தனன் எதிர்ப் பான் என்று முன்னமே நன்குணர்ந்திருந்தான். இராஜைய வர்த்தனன் எதிர்த்து வந்ததும், தானும் பெரும்படையுடன் சென்று அவனைச் சசாங்கன் எதிர்த்தான். இருவருக்கும், கடும்போரில் ஒருவனை மற்றவன் வெல்லவேண்டு மென்ற எண்ணமும், சினமு முண்டாயின. பலநாட்கள் வரை வெற்றி தோல்வி யின்றிப் பெரும்பொர் நடந்தது.

இராஜையஸ்ரீ தான் சிறையினின்றும் தோழி மார்களுடன் தப்புவதற்குத் தக்க தருணம் பார்த் துக்கொண் டிருந்தாள் என்று கூறினோ மல்லவா? தன் தமையன் சசாங்கனை யெதிர்த்துப் பழிக்குப் பழி வாங்க எண்ணிக் கடும்போர் புரிகின்றான் என் பதை யவள் அறிந்தனள். அதுதான் தக்க சமயம் என்று எண்ணி ஒருநாள் இரவு தன் தோழியர்க ளோடு அவர்கள் உதவிகொண்டு எவ்வாறோ சிறையி

னின்றும் தப்பி விந்தியமலைக் காடுகளை யடைவதற் காக முயன்றனள். அவள் அக் கருமத்தில் வெற்றி பெற்றுளாதலின், தன் தோழிமார்களோடு ஒருவரும் அறியா வண்ணம் சில நாட்களில் விந்திய மலைக் காட்டை யடைந்தனள். அவள் சிறைச் சாலையி னின்று தப்பியதையும், விந்திய மலைக் காட்டை யடைந்ததையும்பற்றி 'ஸ்ரீ ஹர்ஷன்' என்னும் தனிக் கட்டுரையில் வாசிப்பீர்கள். அச் செய்கைகளை நாம் படித்துணர்வோமாயின் கல் மன மாயினும் கரைந்துருகும் என்பதிற் சிறிதும் சந்தேக மில்லை.

சசாங்கன் இராஜ்ய வர்த்தனனோடு வீரம் மிக் குடையோனாய் எதிர்த்துப் போர் புரிந்தான். என் றாலும், அவனால் இராஜ்ய வர்த்தனனை வெல்வது அரிதென்று சின்னாளில் அவனுக்கே புலப்பட்டது. ஒழுக்கம் பிழைத்தவர் எவற்றையும் செய்யத் துணிவ ரன்றோ? சசாங்கன் கரவுடை மனத்தினனாய் வஞ்ச கத்தினால் இராஜ்ய வர்த்தனனைக் கொன்று விட வும் துணிந்து விட்டனன். அதனால் அவன் இரா ஜ்ய வர்த்தனனுக்குக் கீழ்ப்படிந்தவன்போல் நடித் தான். தன் பகைவனான இராஜ்ய வர்த்தனனைத் தன் னூர்க்கு அழைத்தான். அந்தோ! பாவம்!! இரா ஜ்ய வர்த்தனன் மெய்யென நம்பிப் போரினை நிறு த்திவிட்டுச் சசாங்கனோடு அரண்மனைக்குச் சென்ற னன். அங்கு இராஜ்ய வர்த்தனனுக்கு உபசாரணை கள் பல நடந்தேறின. அவைகளினால் சசாங்கன்மீது அவனுக்கு அணுவளவேனும் ஐயம் ஏற்பட வில்லை. ஆனால் ஒரு சமயம் உணவு உட்கொண்டிருக்கும்

பொழுது இராஜ்யவர்த்தனன் வஞ்சகத்தால் கொல்லப்பட்டான். சசாங்கனுக்கு இராஜ்யஸ்ரீ தப்பியோடிப்போன விஷயமும் தெரியவந்தது. அவளை மீண்டும் பிடித்து வந்து சிறையி லடைக்கச் சசாங்கன் முயற்சி செய்து வந்தனன்.

நெடுநாட்களாகியும் தமையன் வாராமையைக் கண்ட ஹர்ஷன் தமையனுக்கு ஏதேனும் ஏதம் நேரிட்டிருக்க வேண்டும் என்று தன் மனத்தில் தீர்மானம் செய்துகொண்டான். அதனால், தானும் படைகளைத் திரட்டிக்கொண்டு அண்ணனுக்கு உதவி புரிதற்குச் செல்ல வெண்ணினன். ஆனால் ஹர்ஷனுக்குத் தானேச்சுரத்தை விட்டகன்றால் ஹூணர்கள் தருணம் பார்த்திருந்து எதிர்ப்பினும் எதிர்ப்பார்கள் என்ற எண்ணம் மனத்தில் குடிகொண் டிருந்தது. அதனால் ஹர்ஷன் நெடுநாள் சிந்தித்து முடிவில் படையோடு தமையனுக்குத் துணையாய்ச் செல்வதெனத் தீர்மானம் செய்துகொண்டான். அந்நிலையில் இராஜ்யவர்த்தனன் சசாங்கனால் வஞ்சித்துக் கொல்லப்பட்டான் என்றும், தங்கையான இராஜ்யஸ்ரீ சிறையினின்றும் தப்பி ஓடிப்போய்விட்டாள் என்றும் ஹர்ஷன் கேள்விப்பட்டான். அந்தோ! பெரிதும் பாவம்! அந் நிலையில் ஹர்ஷன் பட்ட துயர் இத்துணைத் தென்று எம்மால் எட்டில் எழுதுந் திறத்ததன்று. அவன் ஒருசமயம் தன் தமையன் வஞ்சனையால் கொல்லப்பட்டதை நினைந்து வருந்துவான். அப்பொழுது அவன் மனத்தில் சினமும் துக்கமும் தோன்றித் தோன்றித் துன்புறுத்தும். ஒருசமயம்

தன் தங்கையின் நிலையினை நினைந்து பரிதபிப்பான். அந்தோ! அவன், தன் தமையனை நினைக்குங் காலத்தில் அன்னானை வஞ்சித்துக் கொன்ற பாதகனைத் தன் வாளால் வெட்டி வீழ்த்திப் பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்றெண்ணுவான். தன் சகோதரியை நினைக்கும்பொழுது அவளுக்குற்ற துயரினை எண்ணி எண்ணி நெஞ்சம் புண்பட்டவனாய் அவளை எவ்விதத்திலாயினும் தேடிக் கண்டுபிடித்துக் கொணர்ந்து தன்னுடன் வசிக்கும்படிச் செய்யவேண்டும் என்கிற எண்ணம் உண்டாகும். ஹர்ஷனுக்குச் சகோதரியினிடத்தில் சிறந்த அன்பு உண்டு. அதற்குக் காரணம் அவளுடைய உயர்ந்த ஒழுக்கங்களும், சிறந்த குணமும், நிறைந்த கல்வியுமே யாகும்.

தானேச்சுர மெங்கும் இராஜைய வர்த்தனனின் வீழ்ச்சி பரவிற்று. இராஜைய வர்த்தனனுக்கு அரசுரிமை பெற மக்கள் இருந்தனர் என்றாலும், அவர்கள் மிக்க இளைஞர்களாக விருந்தமையாலும், நாட்டின் நலத்தை நாடியும், அரச குடும்பத்திற்குற்ற நிலையினை யறிந்தும் அக்காலத்தில் அரச பதவியை ஏற்றுக்கொள்ளத் தக்கவன் ஹர்ஷனே என்பதை யுணர்ந்தும் குடிகள் ஹர்ஷனை அரசனாக்கினார்கள். அதனால் ஸ்ரீ ஹர்ஷன் கி. பி. 606ல் தனேச்சுவரத்திற்கு அரசனானான். அவன் தங்கை நாடாகிய (கானோஜ்) கன்னோசியும் அவன் ஆட்சியி லடங்குவதாயிற்று. ஹர்ஷன் அரசன் ஆனதும் தன் தமையனையும், தங்கை புருஷனையும் கொன்ற பாதகனும், தன் சோதரியைச் சிறை செய்தவனுமான மாளவ தேசத்

தரசனை சசாங்கனைப் போரில் வென்று, அவனைக் கொன்று, அவன் நாட்டைக் கைப்பற்றுவதே முதற் கடமை யென்று தீர்மானம் செய்துகொண்டான். உடனே, தான் சேனைகளைத் திரட்டிக் கொண்டு மிக்க சினத்தோடு கடுகிச் சென்று சசாங்கனைப் போர்க் களத்தில் எதிர்த்தான். சசாங்கன் இத்தகைய படையெழுச்சியை எதிர்பார்த்திருந்தவனே. ஆதலால் அவனும் தனக்கு என்றைக்கேனும் ஒரு நாள் தானேச்சுவர அரசர்களினல் துன்பம் உண்டென்று உணர்ந்து திரண்ட படையைச் சேகரித்து வைத்திருந்தவன். என்றாலும், அவன் படை ஹர்ஷ வர்த்தனன் படைக்கு முன் நிற்கும் ஆற்றலுடைய தாகுமோ? ஹர்ஷ வர்த்தனனுக்குத் தன்னாட்டுப் படையேயன்றிக் கன்னோசி நாட்டுப் படையு மன்றோ துணை புரிகின்றது. எனினும் சசாங்கன் ஹர்ஷனைக் கண்டு அஞ்சவில்லை. திரண்ட படையுடன் வந்து சசாங்கன் போர்க் களத்தில் ஹர்ஷனை எதிர்த்தான். ஹர்ஷன் உண்மையில் ஆச்சரிய மடைந்தான். ஏனெனில் சசாங்கனிடத்தில் அத்தகைய பெரும்படை இருக்கு மென்று ஹர்ஷன் கனவிலுங் கருத வில்லை. இரு படைகளும் போர்க் களத்தில் நெருங்கிக் கலந்தன. போர் மிகவும் கடுமையாகவே நடந்தது. சசாங்கன் தன் முழு ஆற்றலையும் போர்க் களத்தில் தோற்றுவித்தா னெனினும் அது பயனற்ற தாயிற்று. முடிவில் சசாங்கன் போரில் கொல்லப்பட்டான். "கேடுவான் கேடு நினைப்பான்" என்பதற்கு நாசத்தை யடைந்த சசாங்கனே உலகத்

தாருக்கு ஓர் இலக்கானன். மாளவதேசம் ஹர்ஷன் கையகப்பட்டது. தமையனையும், சோதரி புருஷனையும் கொன்ற பகைவனை சசாங்கனது உடலைப் போர்க் களத்தில் வெட்டுண்டு கிடக்கும் நிலையில் கண்ட பின்தான் ஹர்ஷன் மனம் ஒருவாறு சமாதானத்தை யடைந்தது. பின், அவன் சகோதரியைத் தேடிக் கண்டுபிடிக்கும் பொருட்டு முயல்வா னயினன். இராஜ்யஸ்ரீ தன் தோழிமார்களுடன் சிறையினின்றும் தப்பிப் பிழைத்து விந்திய மலைச் சாரலையடைந் துள்ளனள் என்பதைக் கேள்விப்பட்டு ஹர்ஷன் தன் ஆட்களை ஆங்காங்கு அனுப்பித்துத் தேடும்படிக் கட்டளையிட்டுவிட்டுத், தானும் சிலருடன் அவ்வினைமேற்கொண்டு விந்திய மலையை நோக்கிச் சென்றனன்.

இராஜ்ய வர்த்தனனுக்கும் சசாங்கனுக்கும் கடும் போர் நிகழ்ந்து கொண்டிருக்கையில் முன்பே ஆலோசித்து முடிவு செய்து கொண்டிருந்தபடித் தோழிமார்களுடன் புறப்பட்டு இராஜ்யஸ்ரீ சிறையினின்றும் தப்பி ஓடினள். என்றாலும், அவள் தன் தோழிமார்களுடன் சிறையினின்றும் தப்பி வருதற்குப் பெருமுயற்சி வேண்டியதா யிருந்தது. அம்மட்டு மன்றிப் பலவிதக் கஷ்டங்களையும் அடைய நேர்ந்தது. எனினும் அவற்றை யெல்லாம் ஒரு பொருட்டாக நினையாமல் தோழிமார்களுடன் சிறையினின்றும் தப்பி வந்த அவள் ஒருவர் கண்ணிற்கும் தென்படாமல் விந்திய மலையை நோக்கிக் கடிது நடந்தனள். பகல், இரவு என்னும் வேற்றுமை யின்றி

யும், ஊண், உறக்க மின்றியும், அன்னுள், துணைவிக ளோடு காடுகள், மலைகள், ஆறுகள் முதலியனவற் றைக் கடந்து விந்திய பர்வதத்தை யடைந்தனள். அரசர் குலத்தில் தோன்றி அரசியா யிருந்து சுக போகங்களை அனுபவித்து வந்த இராஜையஸ்ரீ காடு களில் காலால் நடந்து சென்று, ஊண் உறக்க மின்றி ஒருவராலும் பார்க்கப்படாமல் திரிய வேண்டிய தாயிற் றென்றுல் "செல்வம் நிலையாமையை யுடை யது" என்பதையும், "குடை நிழலி லிருந்து குஞ்சர மூர்ந்தோர் நடைமெலிந் தோரூர் நண்ணினும் நண்ணு வர்" என்பதையும், "வினைப் பயன் எத்தகையாரை யும் வாட்டும்" என்பதையும் நமக்கு அறிவிக்கின்ற தன்ருே! சீதையு மன்ருே சிறையிற் புகுந்தும், ஆங் கிருந்து மீண்ட பின் கானக மடைந்துங் கஷ்டப்பட்ட னள். அவள் அப்பொழுது, "விலக்கரிதாய விதி யினல் விளையும் விளைவையார் மேதினி யறிவார்" என்றதும், "அவனிதலத் தவ்விதியை வெல்லும் வகை யார் வல்லாரே" என்றதும் உண்மை உரைக ளன்ருே? இதனலன்ருே பெரியார் ஒருவர் சிறந்த நுண்ணறிவால் யாக்கையின் தன்மையைத் தெரிந்து, "வினையின் வந்தது வினைக்கு விளைவாயது" என்று கூறி யுள்ளார்.

இராஜையஸ்ரீ, தான் விந்திய மலையிலுள்ள ஒரு காட்டில் எவரும் அறியா நிலையில் இருப்பதைச் சில நாளில் அறிந்தாள். அவளுடைய துணைவிகள் அனை வரும் அவளுக்குற்ற இன்னலை நோக்கி மிக வருந்தி னர். அந்நிலையில் இராஜையஸ்ரீ உயிர் வைத்திருக்க

விரும்பவில்லை, அவள் கணவனை யிழந்ததினாலும், சிறைபிற் புகுந்த அவமானத்தாலும் உயிர் துறப்பதே நலம் என்று எண்ணி அவ்வாறே புரியவும் தொடங்கினள். தோழிகள் பலவாறு தேற்றிக் கூறியும் பயன்படாமை கண்டு வருந்தினர். முடிவில் அவர்கள் ஒன்றும் செய்ய இயலாதவர்களாய் அவ்விடத்தில் ஒரு குழி தோண்டி நெருப்பை யுண்டாக்கினார்கள். இராஜ்யஸ்ரீ அதனை வலம் வந்தாள்.

ஹர்ஷ வர்த்தனன் சில துணைவர்களைத் தன்னுடன் கூட்டிக்கொண்டு விந்திய மலையிலுள்ள காடுகளிலெல்லாம் தன் தங்கையைத் தேடித் திரிந்து கொண்டே வந்தான். அவன் படைகளெல்லாம் விந்திய மலையிலுள்ள காடுகளில் இராஜ்யஸ்ரீயைத் தேடித் திரிந்தன. தங்கையைக் காணுமல் மன்னன் தனேச்சுவரத்திற்குத் திரும்பிச் செல்லான் என்பதைத் துணைவர்களும், படையிலுள்ளார்களும் அவன் செய்கையா லறிந்துகொண்டனர். இராஜ்யஸ்ரீயைப் பற்றிக் கூறுவார் ஒருவரும் அக் காட்டில் இல்லை. ஹர்ஷ வர்த்தனன் பித்துக் கொண்டவனைப்போல் விளங்கினன். முடிவாகப் பல விடங்களில் சுற்றித் திரிந்து பின் இராஜ்யஸ்ரீ இருக்கும் காட்டிற்கு வந்தான். அவன் மனம் படபடவென்று அடித்துக் கொண் டிருந்தது. என்ன செய்வான் பாவம்! அக் காட்டில் அங்குமிங்கும் சுற்றித் திரிந்த மன்னன் நெருப்புக் குழி இருக்குமிடம் நோக்கி வருவா னயினன். என்னே! என்னே!! நெருப்புக் குழியில் விழுந் தருவாயி லிருந்த இராஜ்யஸ்ரீ விரைந்தோடி

'அண்ணு' என்றலறிக்கொண்டே எதிர் நோக்கி வந்துகொண்டிருந்த மன்னன் அடிகளில் அடி யற்ற மரம்போல் நெடிது படியின்மேல் வீழ்ந்தாள். மன்னன் திகைப்படைந்தனன். கண்களில் நீர் ஊற்றெடுத்துப் பெருகிற்று. அவனால் வாய் பேசவும் இயலவில்லை. பின் மன்னன் ஒருவாறு தேறிக் குனிந்து தன் சோதரியைத் தூக்கினுன். இருவரும் சிறிது நேரம் பேசாமல் ஒருவரை ஒருவர் நோக்கிய வண்ணமாயிருந்தனர். 'பிரிந்தவர் கூடினுற் பேச வேண்டுமோ?' என்ற கம்பர் வாக்கு நோக்கத்தக்கதே. பின் ஒருவாறு இருவரும் தம்மைத் தாமே தேற்றிக்கொண்டு சம்பாஷிக்க லாயினர். அதற்குள் மன்னனின் சேனைகளும், துணைவர்களும் வந்துசேர்ந்தனர். இராஜ்யஸ்ரீயின் துணைவர்களும் அங்கு அடைந்தனர். மன்னன் தான் கொணர்ந்திருந்த ஆகாரம் முதலியவற்றைக் கொடுத்துத் தன் சோதரியை யுண்பித்தனன்.

ஹர்ஷ வர்த்தனன் இராஜ்யஸ்ரீயுடன் தனேச்சுவரத்தை வந்தடைந்தான். இராஜ்யஸ்ரீ உயிர்வாழ விரும்பினுள் அல்லளேனும் ஹர்ஷ வர்த்தனனுடைய வேண்டுகோளால் உயிர் துறக்க விரும்பவில்லை. அவள், தன் தமையனுல் மிகவும் விரும்பப்பட்டவளாதலினுல் அவனுக்கு அரசியற் றுறையிலும், மதநூல் பயிற்சியிலும் சிறந்த துணையாக இருந்து வந்தனள். ஹர்ஷ வர்த்தனனது மேன்மைக்கு இராஜ்யஸ்ரீ தான் காரணம் என்பதை அவன் சரித்திரத்தை உற்று நோக்குவார்க்குப் புலனுகாதிராது.

ஹர்ஷ வர்த்தனன் தான் இராஜ்ஜியத்தைப் பெற்ற தும் தன் சேனைகளைப் பலப்படுத்திக்கொண்டான். அவனிடம் 50000 காலாட் படைகளும் 20000 குதிரைப் படைகளும், 12000 யானைப் படைகளும் இருந்தன. அவற்றைக்கொண்டு வட இந்தியா முழுவதையும் ஜயித்து தன்னுட்டைப் பரவச் செய்தான். காமரூப தேச (Assam King) அரசனை குமார ராஜனும் நேபாளத் தரசனும், கூர்ஜ்ஜர மன்னனும், அவனுக்குக் கீழ்ப்படிந்தனர். அவனுல் அக்காலத்தில் ஜயிக்கப்படாதது காஷ்மீரும் பாஞ்சாலமுமே யாகும். அவன், பின் தக்ஷிண பதத்தையும் தன்னகப்படுத்திக்கொள்ள விரும்பினன். அதனுல் கி. பி. 619-க்குள் வடநாடு முழுவதையுங் கைப்பற்றிக்கொண்டு கி. பி. 620-ல் தக்ஷிண பதத்தின்மேல் படையெடுத்து வந்தனன். அவ்வாறு அவன் படையெடுத்து வந்ததே கிழக்கே சென்றிருந்த புலிகேசியை வடக்கே வந்து சேரும்படிச் செய்தது.

புலிகேசி கீழ்ப்பக்கத்தில் தகுந்த சேனையை நிறுத்திவைத்துவிட்டு வடக்கு நோக்கித் திரண்ட சேனையுடன் சென்றுன். தபதி நதிக்கும், நர்மதை நதிக்கும் இடையில் தன் சேனைகளைத் திரட்டி வைத்துக்கொண்டு பெரும்படையுடன் வரும் ஹர்ஷ வர்த்தனனைப் புறங்காட்டி ஓடும்படிச் செய்ய புலிகேசி தங்கியிருந்தான். ஹர்ஷ வர்த்தனனுக்குப் புலிகேசியிடம் பெரும்படை யிருப்பதும், அவன் தன்னைப் போல் தக்ஷிணத்தில் சிறந்து விளங்கும் அரசன் என்பதும், அவன் தன் படையெழுச்சியைத் தடுப்

பான் என்பதும் தெரியாமற் போகவில்லை. என்ரு லும் தன்னிடம் சிறந்த போர் முறையில் தேர்ச்சி பெற்ற பெரும்படை யிருந்தமையே அவனைப் படை யெடுத்துச் சென்று பிற நாடுகளைக் கைவசப்படுத் தும்படி ஊக்கியது. ஆதலின் ஹர்ஷ வர்த்தனன் பெரும்படையுடன் தக்ஷிண பதத்தைக் கைப்பற்ற எண்ணி வந்தான். அவன் திரண்ட படையுடன்வந்து நர்மதைக் கரையை யணுகினன். அதனைப் புலிகேசி யுணர்ந்து அவன் படைக் கேற்றவாறு தானும் படை களைத் திரட்டிக்கொண்டு தபதிக் கரையை யடைந் தான். சாளுக்கிய இராஜ்ஜியத்தின் குடிகள் புலிகேசி யினிடம் சிறந்த மதிப்பும் நம்பிக்கையும் வைத்திருந் தனர். ஆதலால் புலிகேசிக்குத் துணை புரிவதில் அவர்கள் முழு மனதுடையவர்களாய் இருந்தனர்; உதவியும் புரிந்தனர். அதனுல் பெரும்படையுடன் வந்த மிக்க பராக்கிரமசாலியெனப் பெயர்பெற்ற ஹர்ஷனை எவ்விதத்திலும் எதிர்த்துத் துரத்திவிட லாம் என்னும் உறுதி புலிகேசியின் மனத்தில் தோன் றிற்று. தம்பிமார்களும், அவனுல் ஜெயிக்கப்பட்ட மன்னர்களும் துணையா யிருந்தனர் ஆதலால், பெரும் பகைவனை ஹர்ஷனைக் கண்டு அவன் சிறிதும் அஞ்ச வில்லை. அவன், தன் படை வீரர்களுக்குப் பல வீர மொழிகள் கூறி அவர்களைத் தன் வயமாக்கிக் கொண் டான். அவ் வீரர்களும் உயிர் போவதாயினும் அஞ் சாது எத்தகைப் பகைவர்களையும் எதிர்த்துப் போராடும் ஆற்றலுடையவர்கள். ஆகவே ஹர்ஷன் படையெழுச்சிக்குப் புலிகேசி ஒரு முட்டுக் கட்டை போல் அவனைத் தென்பாகத்தில் தடுப்பவனுயின்.

ஹர்ஷன் படைகளை நடத்திக்கொண்டு நர்மதை நதியைக் கடந்து நர்மதைக்கும் தபதிக்கும் இடையி லுள்ள பெருநிலப் பரப்பை யடைந்தான். அடைந் தவன் ஆச்சரியமும் திகைப்பும் அடைந்தான். அவன் படைகளுக்கு முன் சிறிதும் அஞ்சாது எதிர்த்து நிற் கும் புலிகேசியின் படைகளைக் கண்டான். தன்னைப் பற்றிக் கேட்டறிந்தும், தன் படைத்திரளைக் கண்டும் தன்னை அஞ்சாது எதிர்க்கும் அரசன் ஒருவன் இருப் பான் என்பது அவன் மனத்தில் என்றுமே தோன்ற வில்லை. தன் பலத்தைக் கேட்டவர்கள் தனக்குக் கீழ்ப்படியா திரார் என்பதே அவனது முழு நம் பிக்கை. அத்தகைய எண்ணமுடையவனுக்குப் புலி கேசி தன் படையுடன் சென்று எதிர்த்தது ஆச்சரி யத்தையும் திகைப்பையு முண்டாக்கியது வியப்பல் லவே! ஹர்ஷன் சினங்கொண்டு புலிகேசியுடன் போர் புரியத் தொடங்கினான். புலிகேசியும் தன் படை வீரர் களுக்கு உற்சாகத்தை யூட்டிப் போர் புரிவானானான்.

இருவருக்கும் சினம் மிக்கிருந்ததினால் போரும் கடுமையாகவே இருந்தது. போரும் நெடுநாள் வரை நடைபெற லாயிற்று. ஹர்ஷ வர்த்தனன் படையில் பலர் போரில் பட்டொழிந்தனர். புலிகேசியின் படையிலும் சேதம் உண்டு. போர் தொடங்கி நெடு நாளாகியும் வெற்றியும், தோல்வியும் ஏற்பட்டில. ஆனால், அப்போரில் புலிகேசிக்கே பல வகைகளிலும் அநுகூலங்க ளிருந்தன. போர்க்களம் அவன் நாட் டின் எல்லையில் அமைந்தது ஒரு வகையில் அவனுக் குப் பெரும்பயன் அளிப்பதாயிற்று. அதாவது

அவன் படைவீரர்களுக்கு உணவு, ஆடை முதலியன வற்றை நாட்டினின்றும் கொண்டு வந்து கொடுப்ப தற்குப் பெரிதும் வசதியாக இருந்தது. மற்றும் படைகளை அவ்வப் பொழுது மிகுதிப் படுத்திக் கொள்ளவும் அநுகூல மாயிற்று. ஆனால், ஹர்ஷவர்த் தனனுக்கு அத்தகைய அநுகூலங்கள் யாவு மில்லை. உணவுப் பொருள் முதற்கொண்டு மிகத் தூரதேச மான தன் நாட்டி னின்றே வரவேண்டிய தாயிற்று. படையை அவ்வப் பொழுது மிகுதிப் படுத்திக் கொள்ள வேண்டிய வசதியும் போதிய அளவு இல்லா மல் இருந்தது. இக் காரணங்களால் நாளுக்கு நாள் ஹர்ஷனின் படை குறை வுற்றது. என்றாலும் ஹர் ஷன் போரை நிறுத்தவில்லை. புலிகேசியும் எதிர்த் துச் சண்டை செய்ய அஞ்சவில்லை.

நாட்கள் பலவாயின பின் ஹர்ஷன் தன் படை யின் தொகை பெரிதும் குறைவுற் றிருப்பதையும், தனக்கு வேண்டியளவு துணை கிடைக்காததையும், மற்றும் பல துன்பங்கள் உள்ளனவற்றையும் நன்கு உணர்ந்தான். அப்பொழுது புலிகேசியும் தக்ஷிண பதத்தில் தன்னைப் போன்ற ஒப்புயர்வற்ற பராக்கிரம சாலியான மன்னன் என்பது அவனுக்குத் தோன்று மற் போகவில்லை. அதனால் புலிகேசியை வென்று தக்ஷிண பதத்திற்குள் பிரவேசிப்பது முடியாத காரி யம் என்று ஹர்ஷன் நன்கறிந்து கொண்டான். தன் படை நாளுக்கு நாள் குறைவடைவதை நினைத்து மீண்டு தன்னாடு அடைதலே சாலச் சிறந்ததென நினைத்தான். புலிகேசிக்கு நாளுக்கு நாள் பலம்

குறைவு படாம லிருந்ததை யுணர்ந்து முடிவில் ஹர்ஷ வர்த்தனன் தன் படைகளைக் கூட்டிக்கொண்டு சென்று புலிகேசியிடம் போர் புரிந்து தோல்வி யுற்றான். அதனால் எஞ்சிய படையுடன் ஹர்ஷன் தான் நினைத்த காரியத்தை முடித்தற்கு இயலாதவ னாய்த் தன்னாடு நோக்கிச் சென்றான். அவனுடைய யானைகள் பல புலிகேசியினால் பிடிக்கப்பட்டன.

புலிகேசி, வடநாட்டரசன் படையுடன் தோற் றுத் திரும்பிப் போவதைக் கண்டு சந்தோஷமடைந் தான். குடிகள் அனைவரும் புலிகேசியைப் புகழ்ந்த னர். ஹர்ஷன் சேனையாகிய வெள்ளத்திற்கு ஒரு கல்லணைபோல் நின்ற புலிகேசியின் கீர்த்தி தக்ஷிணா பதம் முழுவதும் பரவலாயிற்று. ஹர்ஷனை ஜெயித் தது முதல் புலிகேசி "பரமேஸ்வரன்" என்ற பட் டத்தையும் தரித்துக்கொண்டான். ஆயினும் புலி கேசிக்குத் தன் இராஜ்ஜியத்தின் வடக்கெல்லையை எப்பொழுதும் காத்துவர வேண்டும் என்ற எண்ணம் தோன்றிற்று. அதனால் அவன் தகுந்த சேனைகளைத் தன் இராஜ்ஜியத்தின் வடக்கெல்லையில் நிறுத்திக் காத்துவந்தனன். புலிகேசி ஹர்ஷனை ஜயித்ததைப் பற்றிப் பின்வந்தோர் விசேஷமாக எடுத்துக் கூறுகின் றனர். புலிகேசிக்கு அம்மட்டோடு மன அமைதி ஏற் படவில்லை. அவனுக்கு விந்திய மலைக்குத் தெற்கே யுள்ள இராஜ்ஜியங்கள் முழுவதையும் தன்னடிப் படுத்தவேண்டு மென்னும் எண்ணம் இருந்தாலும், கிழக்குப் பக்கத்தில் கலிங்கர்களும், பல்லவர்களும் துன்பங்கள் பல செய்து வந்தமையாலும் போர்த்

தொழில் அவனை விட்டு ஒழிந்தபா டில்லை. பல்லவர் களோ வலிமை பெற்றவர்களாயும், குலப் பகைவர்க ளாயுமிருந்தனர். ஆதலின் புலிகேசி சேனைகளைத் திரட்டிக்கொண்டு பகைவர்களை எதிர்க்க எண்ணினன்

## 10. கோசல கலிங்க மன்னர் வீழ்ச்சி.

கிழக்கில் போர் செய்துகொண்டிருந்த புலிகேசி தன் சேனைகளுடன் திடீரென வந்த ஹர்ஷ வர்த்தனனின் படை யெழுச்சியைத் தடுப்பதற்கு வடக்கு நோக்கிச் சென்றான் என்று முன் படித்தோம் அல்லவா? அவ்வாறு அவன் வடக்கு நோக்கிச் சென்றது கோசல கலிங்க தேசத்து மன்னர்களுக்கு மிக்க நன்மையை விளைத்தது. அவன் வடக்கே சென்றதனால் அவர்கள் படையெடுத்து வந்து அவன் நாட்டைக் கைப்பற்றவும் முடியவில்லை. ஏன் என்றால் தக்கதோர் சேனையைத் தன் இராஜ்ஜியத்தின் கிழக் கெல்லையில் புலிகேசி வைத்திருந்தான். ஆனால் அவர்களுக்குப் பின்னும் போருக்கு வேண்டியவைகளைச் சேகரித்துக்கொள்ள போதிய காலம் கிடைத்தது. அவர்கள் புலிகேசியிடம் பகைமை பாராட்டி வந்தவர்கள் ஆதலால் அவன் எதிர்த்துப் போர்செய்து அவன் வலியை அழித்துவிடுவதென்றே துணிபு கொண்டிருந்தனர். புலிகேசிக்கு வெற்றிக்குமேல் வெற்றி யுண்டாவதை யறிந்திருந்தும் அவர்கள் அவனோடு பொரவே நினைத்தனர். ஆதலின் முதலில் கோசல தேசத்து மன்னன் பெரும் படையுடன் போருக்கு வந்தான். அச் செய்தி புலிகேசிக்குத் தெரிந்தது.

புலிகேசிக்குக் கோசல நாட்டு மன்னன் போருக்கு வந்தது புதுமையாகத் தோன்றவில்லை. ஏனெனின் அவனுக்குக் கிழக்கிலுள்ள மன்னர்கள்

போருக்கு வருவார்கள் என்பது தெரியும். புலி கேசியும் திரண்ட படைகளுடன் விரைந்து சென்று கோசல மன்னனை எதிர்த்தான். இருவர் படைகளும் போர்க்களத்தில் மிக்க திறனுடன் போர்புரிந்தன. முடிவில் வெற்றி புலிகேசிக்கே என்பதைச் சொல்ல வும் வேண்டுமோ? கோசல மன்னன் தோல்வி யடைந்து புலிகேசிக்குக் கப்பம் செலுத்தி வருவ தாய் ஒப்புக்கொண்டான். புலிகேசியும் அவனை விடுத்தனன். பின் கலிங்க நாட்டுக் காவலன் புலிகேசி யுடன் பொருதற் கெழுந்தனன். அந்தோ! பாவம்! அவனும் போரில் தோற்றுப்போய்ப் புலிகேசிக்குக் கப்பம் செலுத்தி வருவதாக ஒப்புக்கொண்டனன். ஆகவே கோசலமும் கலிங்கமும் புலிகேசியின் ஆட்சி யில் சிற்றரசு நாடுகளாயின. பின் புலிகேசி ஆந்திர வரசர்கள் மீதும், வெங்கி நாட்டுப் பல்லவர்கள் மீதும் படையெடுத்துச் சென்றான். அவர்கள் அவனோடு பொருது தோற்றொழிந்தார்கள். விஷ்ணு வர்த்த னனை வெங்கி நாட்டுத் தலைவனாக்கி அவனிடத்தில் தக்கதோர் பெரும்படையை வைத்துக் கிழக்கு பாகம் முழுவதையும் தன்னுடையதாக்கிக் கொண் டான். அதனால் புலிகேசியின் பகைவர்கள் ஒன்றும் செய்தற் கியலாதவராய்த் தாம் அவனுக்குக் கீழ்ப் படிந்த அரசர்களாகவே இருந்து வந்தனர்.

புலிகேசி பின்னும் படைகளைத் திரட்டிக் கொண்டு காஞ்சியிலிருந்த பல்லவர்களையும் சேர சோழ பாண்டியர்களையும் போரில் கலக்கி வெற்றி கொண்டு அவர்கள் தேசத்தையும் தன் ஆட்சியில்

அடக்கிக்கொள்ள விரும்பினன். அதனல் அவன் பெரும் படையுடன் தெற்கு நோக்கி வரலாயினன். இக்காலத்தில் புலிகேசியின் புதல்வர்களான சந்திராதித்தியன், விக்கிரமாதித்தியன், ஆதித்திய வர்மன், ஜேயஸிம்ம வர்மன் என்னும் நால்வர்களும் தக்க புஜபல பராக்கிரமம் மிகுந்தவர்களாய் இருந்ததினல் அவனுக்குப் பல நன்மைக ளுண்டாயின. அவர்கள் தந்தைக்குப் பலவிதங்களிலும் உதவியா யிருந்தனர். அதனற்ருன் புலிகேசி தென்னட்டிலும் படையெடுத்து வரலானன்.

## 11. பல்லவர்கள்

பல்லவர்கள் எனப்படுவோர் தக்ஷிண பதத்தில் கி. பி. 200 முதல் கி. பி. 740 வரை சிறந்த வலிமை பெற்று விளங்கிய அரசர்கள் ஆவர். மத்திய இந்தியாவில் (கி. பி. 300) முதன் முதல் ஆந்திரர்களை ஜயித்து அவர்கள் நாட்டைக் கைப்பற்றிக் கொண்டனர். பல்லவர்கள் யார்? எங்கிருந்து வந்தனர்? என்பதைச் சிறிது தெரிந்துகொள்ள வேண்டியதும் முக்கிய மானதே. பல்லவர்களைத் தமிழர்கள் என்பர் சிலர். சிலர் ஆந்திரர்கள் என்பர். சிலர் பத்தானியர்கள் என்பர். சிலர் ஆரியர் என்பர். ஆதலின் இப்பொழுது நாம் செவ்வையாக ஆராய்ச்சித் துணையால் அவர்கள் யாவர் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். பல்லவர்கள் ஆரிய வம்சத்தினர் என்பதைப் பல காரணங்களால் விளக்கக் கூடும். அவர்கள், காஞ்சியில் இருந்து அரசாண்டு வந்த காலத்தில் பேசி வந்தது பிராகிருதமும், மஹாராஷ்டிரமு மாகும். அவர்கள், தங்களைப் பாரத்துவாஜ கோத்திரத்தவர்கள், என்று கூறிக்கொள்வதே ஆரியர்கள் என்பதை நன்கு விளக்கு கின்றது. மற்றும், சீனு யாத்திரிகன், நரசிம்ம வர்மன் என்னும் பல்லவ வரசனைக் கண்டுள்ளான். ஆதலின் அவ் யாத்ரீகன் கூறுமிடத்து அம் மன்னனை க்ஷத்திரியன் என்று சொல்கின்றான். மற்றும் தென்னிந்தியாவிலுள்ள அவர்கள் சாஸனங்கள் பிராகிருதத்தில் எழுதப்பட்டிருத்தலும் நோக்கத் தக்கது. ஆனால் பல்லவர்கள்

ஆரிய வம்சத்தினரேனும் நாகர் வம்சத்தாரோடு பெண்கோடல், பெண்கொடுத்தல் முதலிய சம்பந்தங்களால் கலப்புற்றனர். வீர கூர்ச்சன் என்னும் பல்லவ அரசன் சாத வாகன வம்சத்தைச் சார்ந்த நாக கன்னிகை ஒருவளை (கி. பி. 178-ல் மணந்து கொண்டான். அவன் மகன் ஸ்கந்த சிஷ்யன். அவன் மகன் குமார விஷ்ணு. இக் குமார விஷ்ணுவே காஞ்சியில் பல்லவ ராஜ்ஜியத்தை நிலைப்படுத்தினன் என்று தெரிகிறது. இவன் காஞ்சியில் பல்லவ ராஜ்ஜியத்தை ஸ்தாபித்த காலம் கி. பி. 200 ஆகும். இதனை இவன் பேயரன் 240 கி. பியில் எழுதிய சாஸனத்தாலும் அறியலாம். கி. பி. 338ல் காஞ்சிபுரத்தைச் சமுத்திர குப்த மன்னன் பாடலிபுரத் (Patna) திலிருந்து படையெடுத்து வந்து கைப்பற்றிக்கொண்டான் என்று தெரிகிறது. ஆனல் சிங்க விஷ்ணு பல்லவன் காலத்தில் மீண்டும் பல்லவ ராஜ்ஜியம் ஸ்தாபிக்கப் படுவதாயிற்று.

புராண இதிகாசங்களில் பல்லவர்களைப் பற்றிக் கூறுவதை நாம் ஆராய்வோம். பல்லவம் என்பது இளந் தளிரைக் குறிக்கும் ஒரு சொல். "பல்லவத்தின் சந்த மடிய வடியான் மருட்டிய தாழ் குழலே" என்பதில் பல்லவம் - தளிர் என்பது பெறப்படும். அவர்கள் தலைமுறை கிளக்குமிடத்தில் பிரம்மா, முதல் அகத்தியர், ஆங்கீரஸர், அத்திரி, பிரகஸ்பதி, சம்யூ, பரத்துவாஜன், துரோணன், அஸ்வத்தாமன் என்று முறையே கூறிவந்து அஸ்வத்தாமனுக்குத் தேவ கன்னிகைகளிடத்துப் பிறந்தவர்கள் பல்லவர்

என்று முடிக்கப்படுகிறது. அவ்வாறு தேவ கன்னிகைகளிடத்தில் அசுவத்தாமனுக்குப் பிறந்த மக்களை இளந் தளிர்மேல் கிடத்திப் போற்றிவந்தனர் ஆதலால் அவர்கள் பல்லவர்கள் என்னும் பெயரைப் பெற்றனர். இஃது ஒருவாறு சாளுக்கியர்களுக்குக் கற்பித்த புராணக் கதையைப் போன்றதாகும். இத்தகைய புராணக் கதைகளை யெழுதி ஒவ்வொரு அரச குடும்பத்தினருக்கும் பெயர் வைத்திருக்கும் ஆரியர்கள் சூழ்ச்சியே சூழ்ச்சி. இப்புராணக் கதைகள் ஒப்புக்கொள்ளத்தக்கவை யன்று. இத்தகைய புராணக் கதைகளைக் கற்பித்ததினால் உண்டாகிய துன்பங்கள் பலவெனினும், அவைகளும் சரித்திர ஆராய்ச்சிக்குப் பொருந்துவதாயு முள்ளன. பல்லவர்கள் க்ஷத்திரியர்கள். அவர்கள் வைதீக மதத்தை யனுசரித்து வந்தனர். குமார விஷ்ணுவின் மைந்தனன் சிவஸ்காந்த வர்மன் அக்கினிஷ்டோமம் வாஜபேயம், அசுவமேதம் முதலிய யாகங்களைப் புரிந்தனன். குப்தர்கள் அசுவமேத யாகம் புரிந்த காலத்திற்கு முன்பே சிவஸ்காந்த வர்மனால் அசுவமேத யாகம் செய்யப்பட்டதென்பதைச் சரித்திரக்காரர் ஸ்மித் துரை மகனாரும் ஒப்புக்கொள்கின்றனர். அவர்கள் மஹாராஷ்டிரர்களைப்போல் சைவ மதத்தையே தழுவினர்கள் ஆவர். ஆயினும் அவர்கள் பிறமத துவேஷிகள் அல்லர். விஷ்ணுவாலயங்களையும் அவர்கள் கட்டியுள்ளனர். அமராவதியி லுள்ள புத்த ஆலயத்திற்கு வேண்டுவன வளித்த பல்லவரசனு முளன் என்றால் அவர்கள் பிறமத துவேஷ மின்றி

வாழ்ந்த நிலை வியக்கத் தக்கதே. காஞ்சி நாட்டில் புத்த மதமும் ஜைன மதமும் பரவி யிருந்ததேனும் சைவமதத்தையே பல்லவர்கள் கைக்கொண் டொழுகி வந்தனர்.

காஞ்சி முதல் வேங்கி வரையிலுமுள்ள இடைப் பட்ட பிரதேசத்தைப் பல்லவர்கள் ஆண்டு வந்தனர். அவ்வாறு ஆண்டு வருகையில் வெங்கி நாட்டைப் புலிகேசி கைப்பற்றிக்கொண்டான் என்று முன்னமே கூறினேமல்லவா ? அதன்பின் பல்லவர் ஆட்சி சிறிது குன்றியது எனினும் தென்னாட்டில் அவர்கள் ஆட்சி வலிபெற் றிருந்தது. தென்னாட்டுப் பல்லவர்களுக் குக் காஞ்சி தலைநகராய் விளங்கிற்று. காஞ்சி என் பது தற்காலத்தில் விளங்கும் காஞ்சீபுரமே யாகும். அக்காலத்திலும் அதற்கு முன்பும் அது ஒரு பெரிய பட்டணமாகவே இருந்தது. பல்லவர்களுக்கு முன்பே காஞ்சி சிறந்து விளங்கிய தென்றால் குற்ற முண்டா காது. அந்நகரில் சிவன் கோயிலும், விஷ்ணு ஆலய மும், ஜீனலயமும் இருந்தன எனினும் அந்நகரில் சிவாலய மிருப்பதே சிறந்ததாகும். அது முக்தி நகரங்கள் ஏழில் ஒன்று.

இதனைத் தலைநகராகக் கொண்டு விஷ்ணு கோப வர்மன் என்னும் பல்லவ வரசன் ஆண்டுவந்தான். அவனைச் சமுத்திர குப்தன் என்னும் அரசன் கி. பி. 340 ல் எதிர்த்தான். அவனைப்பற்றிக் கூறும் அசோக னது சாஸனத் தூண்களில் மூன்று பல்லவ அரசர்கள் பெயர்களை வரைந்துள்ளனர். அவை முறையே காஞ்சி நகரத்து விஷ்ணுகோபன், வேங்கியில் ஹாஸ்தி வர்

மன், பாலக்காட்டில் உக்கிர சேனன் என்பன வாகும்.

கி. பி. ஆறும் நூற்றுண்டின் முடிவில் பல்லவ வரசனுன சிம்ம விஷ்ணு இறந்தான். அவன் மகனுன முதலாவது மகேந்திரவர்மன் கி. பி. 600 ல் அரசனுனன். அவன் சுமார் 30 வருஷம் அரசாட்சி செய்தான். அவன் முதலில் ஜைன மதத்தைத் தழுவிவந்தனன். அக்காலத்தில் தமிழ் நாடு உய்யவும் சைவ மதம் ஓங்கவும் அவதரித்த திருநாவுக் கரசு சுவாமிகளாகிய அப்பர் விளங்கினர். அப்பர் சுவாமிகளால் ஜைன மதத்தினின்றும் சைவமதத்திற்குக் கொண்டு வரப்பட்டவன் மகேந்திர வர்மனே யாவன். அவனுக்கு அப்பெயரே யன்றி அவனிபா ஜன மத விலாஸன், சத்துரு மல்லன், குணபரன் என்னும் பெயர்களு முண்டு.

அவன் ஆட்சியால் தென்னுட்டிற்கு உண்டான நன்மைகள் பல. அவன் கல்வி கேள்விகளிலும், சங்கீதத்திலும் சிறந்த அறிவு வாய்க்கப் பெற்றவன். பெருங் கோயில் பலவற்றைக் கட்டியவனும் அவனே. மலைகளைக் குடைந்து கோயில் கட்டுதல் முதல் முதலில் தென்னுட்டில் அவனுலேதான் தொடங்கப் பட்டது. திரிசிராப்பள்ளி, பல்லாவரம், மாமண்டூர், முதலான பலவிடங்களில் அவனுல் கட்டப்பட்ட கோயில்கள் கண் கவர் வனப்பும் சிறந்த சிற்ப விலக்கணமும் பெற்றுத் திகழ்வன வாகும். மகாபலிபுரத்தில் விளங்கும் சிறப்புடைய ஏழு கோபுரங்க

ளும் அவனால் கட்டப்பட்டவைகளே. இவன் காலத்தில் சைவ சமயம் தழைத்தோங்க லாயிற்று.

பல்லவர்களுக்கும் தமிழ் மன்னர்களுக்கும் தீராப் போர் ஓயாமல் நடக்கும். பல்லவர்கள் தமிழரசர்களை வென்று அவர்கள் நாடுகளைக் கவர்ந்து தம் நாட்டோடு சேர்த்துக் கொள்ளவேண்டும் என்னும் விருப்புடையவர்களாகவே யிருந்தார்கள். ஆதலினால் தமிழரசர்களான சேர, சோழ, பாண்டியர்கள் எப்பொழுது பலக்குறைவுற் றிருப்பார்களென்று பார்த்துக்கொண்டே யிருந்து அப்பொழுதெல்லாம் பல்லவர்கள் அவர்களோடு போர்தொடுத்தல் வழக்கம். மகேந்திரனுடைய தந்தையான சிம்மவிஷ்ணு தமிழ் நாட்டு மூவேந்தர்களோடு போர் தொடுத்து வென்று இலங்கை வரைச் சென்று ஈழ நாட்டையும் ஜயித்து வந்தனன். மகேந்திர வர்மன் காலத்தில் திரிசிராப்பள்ளி அவன் வசம் இருந்தது என்று தெரிகிறது. அதற்கு அவனால் கட்டப்பட்ட மலைக்கோயில் இருத்தலே தக்க சான்றாகும்.

சேர சோழ பாண்டியர்களுக்கு எப்படிப் பல்லவர்கள் விரோதிகளோ அப்படிப் பல்லவர்களுக்குச் சாளுக்கியர் பகைவராய் விளங்கினர். மகேந்திர வர்மனுக்கும் புலிகேசிக்கும் (Pulukesin II) போர் நடந்தது என்றும், அப்போர் கி. பி. 610-ல் நடந்தது என்பதும் பலருடைய கொள்கை. அப்போர் நடக்குங் காலத்தில் மகேந்திரவர்மன் காஞ்சியிலிருந்தான் என்பர் சிலர். சிலர் வெங்கியில் இருந்தான்; அப்போர் அங்கேதான் நடந்தது; அப்போரில்

மகேந்திர வர்மன் தோல்வி யுற்றதினால் வெங்கி நாட்டைப் புலிகேசி கவர்ந்து கொண்டான்; பின், மகேந்திர வர்மன் காஞ்சிக்கு வந்தனன் என்பர். சிலர் காஞ்சியி லிருக்கும்பொழுது புலிகேசி மகேந்திரன் மீது படையெடுத்து வந்தனன்; அவ்விருவரும் போர் புரிந்தனர்; அதில் புலிகேசி மகேந்திரவர்மனை ஜயித்து அவனைத் தன் கீழ்ச் சிற்றரசனாக்கிக் கொண்டான் என்பர். சிலர், புலிகேசிக்கும் மகேந்திரவர்மனுக்கும் போர் நடந்தது உண்மை; ஆனால், அப் போரில் மகேந்திர வர்மன் ஹர்ஷனை எதிர்த்து ஜயித்த புலிகேசியை வென்றான் என்பர். இவைகளில் எது உண்மையாயிருக்கும் என்றாராய்ந்து அறிவது சிறிது கஷ்டமே எனினும் அதனால் தெரியப் படும் விஷயம் முக்கியமானது. நுணுகி ஆராயுமிடத்துப் பல்லவர்கள் புலிகேசியால் வெல்லப்பட்டனர் என்றே கூறவேண்டும். ஏனெனின் அவன் விந்தியமலைக்குத் தென்பாகத்தை யெல்லாம் தன்னுடைய தாக்கிக் கொண்டான் என்பது பொய்யாவதுமன்றிச் சேர சோழ பாண்டிய நாடுகளை முற்றுகை யிட்டதும் முடியாத காரியமாகு மன்றோ?

பின், புலிகேசி தமிழ் நாட்டு அரசர்களை ஜயித்து அவர்களையும் தன் சிற்றரசர்களாக்கிக்கொள்ள விரும்பினான். அதனால் அவன் பெரும் படை திரட்டிக் கொண்டு தமிழ் நாடு நோக்கி வந்தனன். தமிழ் மன்னர்கள் பல்லவர்களால் நான்காம் நூற்றாண்டு முதல் துன்புற்றவர்களாய் அவர்களுக்கு அடங்கிய சிற்றரசர்களாகவே யிருந்துவந்தனர். புலிகேசி பல்லவனைப்

போரில் வென்று சிற்றரசனுக்கிக்கொண்டது அவர்களுக்கு நன்மையை யளிப்ப தாயிற்று. அதனுல் அவர்கள் சில நலங்களை யடைந்தார்களேனும் புலிகேசி தங்கள் நாடுகளின்மீது படை யெடுத்து வருவதைக் கண்டு துன்புற்றனர். அவர்கள், புலிகேசியை எதிர்த்துப் போர் புரிவது எளிதல்ல வென்பதையுமுணர்ந்தனர். அதனுல் அவனோடு நட்புக் கோடலே சிறந்த தென்று எண்ணி யிருந்தனர்.

புலிகேசி திரண்ட படையுடன் பல்லவராஜ்ஜியத்தின் வழியாக வந்து காவிரிக் கரையை யடைந்தான். அவன் போர் புரிய வந்திருக்கும் விஷயத்தைப்பற்றித் தமிழ்நாட்டரசர்களுக்குத் தெரிவித்தனன். அவர்கள் ஒன்றுகூடி வந்து அவன் சொன்ன நியதிகளுக் குடன்பட்டவர்களாய் நட்புக் கொண்டனர். அதனுல் புலிகேசிக்குப் போர்த்தொல்லை யின்றி யொழிந்தது. அவன் சேனைகளை யழைத்துக்கொண்டு வாதாபி நகரத்தை வந்தடைந்தான்.

இவ்வாறிருக்கையில் மகேந்திர வர்மன் இறந்தான். அவன் மகன் நரசிம்ம வர்மன் முதலாவான் அரசனுன். அவனுக்குத் தன் குலப் பகைவனை சாளுக்கிய வரசனைப் போரில் வெல்லவேண்டும் என்ற எண்ணம் சிறு பிராயத்திலிருந்தே அவன் மனத்தில் வேரூன்றிப் பதிந்திருந்தது. அவன் அவ்வாறு போர் புரிய எச்சமயம் வாய்க்குமோ வென்று எதிர்பார்த்துக்கொண்டே யிருந்தான். நரசிம்ம வர்மன் எவ்வாருயினும் புலிகேசியை ஜயிக்கவேண்டும் என்னும் உறுதியைக் கொண்டிருந்தான். ஆத

லால், அவன் சேனைகளைத் திரட்டிக் கொள்வதோடு தன் நாட்டையும் தக்க வழிகளில் காத்துக் கொள்ளவும் முயன்று வந்தான். அவையெல்லாம் எவ்வளவு இரகசியமாகச் செய்து வந்தானேனும் புலிகேசிக்குத் தெரியாமற் போகவில்லை.

நரசிம்ம வர்மனிடம் சிறந்த சேனைத் தலைவர் ஒருவர் இருந்தார். அவரைத் தமிழ் மக்கள் அனைவரும் அறிவர். அவர் சிறந்த பக்தியுள்ளவர். ஒழுக்கத்தில் மேம்பட்டவர்; வாய்மையில் உயர்ந்தவர். அவர் போர்த் தொழிலில் சிறந்த அறிவு படைத்தவர். அவருக்கு நிகராவார் அக்காலத்தில் எவரும் இல்லையென்றே கூறலாம். அதனால் அவரை நரசிம்மவர்மன் தன்னிடத்தில் சேனைத் தலைமைப் பதவியை வகித்து வரும்படி அப் பதவியை அவருக்குக் கொடுத்து அவரை அன்போடு போற்றிவந்தனன். அவர் அந்தணர் குலத்தவர். அவரது இல்லறக் கிழமைபூண்ட மனைவி உயர் குணங்கள் பல ஒருங்கே வாய்க்கப் பெற்ற நங்கை. அவ் வம்மையார் பெயர் திருவெண் காட்டு நங்கை. அவர் பெயர் பரஞ்சோதியார். பின்காலத்தில் அவரைச் சிறுத்தொண்ட நாயனார் என்றழைப்பா ராயினர். அவரால்தான் பல்லவ வரசனுக்குச் சேனைகள் திரட்டப்பட்டன.



வாதாபியிற் சாளுக்கியர் கட்டிய சிவன் கோயில்.

## 15. புலிகேசியும் அரசியலும்

கி. பி. 634-ல், புலிகேசியின் படையெழுச்சி ஒரு வாறு முடிவடைந்தது. புலிகேசி வாதாபியை யடைந்து மன அமைதியோடு அரசாட்சி புரியத் தொடங்கினன். வெங்கி நாட்டிற்குத் தலைவனாக விஷ்ணு வர்த்தனன் அமர்த்தப்பட்டான் என்பதை நாம் முன்பே படித்திருக்கிறோமல்லவா? புலிகேசி, நாஸிக் என்னும் பஞ்சவடிக்குச் சுற்றிலுமுள்ள நாடு களைப் பாதுகாத்து வரும்படித் தன் மற்றொரு தம்பி யான ஜயஸிம்மனை நாஸிக் என்னும் தலைநகரில் அமர்த்திச் சேனைகளையும் பிறவற்றையும் கொடுத் துதவினன்: சாமந்தவதி ஜில்லாவைச் சார்ந்த நாடு களைத் தன் புதல்வரில் மூத்தவனான சந்திராதித்தய னுக்கு அளித்தான். ஆதித்திய வர்மனை மற்றொரு மைந்தனைத் துங்கபத்திரைக்கும் கிருஷ்ணவுக்கும் இடைப்பட்ட நாட்டிற்குத் தலைவனாக்கினன். இவ்வாறு அனைவருக்கும் தகுந்தவாறு தான் வென்ற நாடுகளைப் பிரித்த பின், தன்னுடைய இரண்டாவது மைந்தனை விக்கிரமாதித்தியனைத் தன்னிடத்தே வைத்துக் கொண்டு புலிகேசி அரசு புரிவானாயினன். தன் மைந் தர்களுக்கும் தம்பிமார்களுக்கும் தகுந்த சேனை பல த்தைக் கொடுத்துதவியபடியால் புலிகேசிக்கு அவர் களைப் பகைவர் எதிர்ப்பார்கள் என்ற கவலையே இல் லாமலிருந்தது. மற்றும், அவ்வாறு சேனைகளை உத வித் தான் வென்ற நாடுகளைப் பிரித்து ஆங்காங்குத் தன் தம்பிமார்களையும் மைந்தர்களையும் நிறுத்தியது

புலிகேசியின் சாளுக்கிய ராஜ்ஜியத்திற்குப் பலத்தை யளிப்பதாயிற்று. மற்றும், அரசாட்சி புரியவும் எளிதாயிற்று. தான் வென்ற அந்தந்த நாட்டுக் குடிகள் முரணி நடக்கவும் இயலாதவர்களானார்கள். பகையரசர்களும் புலிகேசியின் வலிமையைக் கண்டு முரணி நடக்க அஞ்சினார்கள்.

புலிகேசியின் கீர்த்தியும் புகழும் பரத கண்ட முழுவதும் பரவிற்று. வட இந்தியாவில் எவ்வாறு சிலாதித்திய ஹர்ஷ வர்த்தனன் சார்வ பௌமச் சக்கிரவர்த்தியாய் விளங்கினானோ அதே மாதிரியாக விந்திய மலைக்குத் தெற்கே கன்னியா குமரி முனை வரைப் புலிகேசி சார்வ பௌமச் சக்கிரவர்த்தியாய் விளங்கினான். தக்ஷிண பதத்தில் சாளுக்கிய வம்சத்தில் தோன்றி, வீர தீர சூரனாய் விளங்கிப் பல மன்னர்களையும் போரில் வென்று தன் இராஜ்ஜியத்தைப் பரவச் செய்து விந்திய மலைக்குத் தெற்கில் குமரி முனைவரை ஒரு கோல் கொண்டோச்சிய ஒரு பெரு மன்னன் புலிகேசி என்றால் அவனைச் சாளுக்கிய குல திலகன் என்றும், சாளுக்கிய குலோத்துங்கன் என்றும் புகழாதிருப்பவர் யாவருளர்? கல்வி கேள்விகளில் சிறந்தவனாதலால் தான் அடைந்த பெருமையைப் பெரிதாக எண்ணிப் புலிகேசி பாராட்டியவன் அல்லன். "நிறை குடம் நீர் தளும்பல் இல்" என்னும் உண்மை யுரைக்கு உதாரணமாகக் கூறத் தகுந்தவன் அவனே. அற்பர்க ளன்றோ தமக்குச் சிறிது பெருமையுற்றிடின் அதனைப் பெரிதாக வெண்ணி மிகவும் தம்மைத் தாமே பாராட்டிக் கொள்வர்.

நோய்யரிசி கோதி பொறுக்காது என்பதை நாம் அற்பர்களிடத்தில் அவர்களுக்கு வாழ்வு வந்த காலத்தில் நன்கறியலாம். புலிகேசியைப் பற்றிப் பரத கண்டத்தாரே யன்றிப் பிறரும் அறிந்திருந்தனர்.

கி. பி. 625 ல் புலிகேசியின் வீரச் செயல்களைக் கேட்ட பாரசீக மன்னன் அவனை மிகவும் கொண்டாடினான். கி. பி. 591 முதல் கி. பி. 628 வரைப் பாரசிகத்தை அரசாண்ட மன்னனான இரண்டாவது குஸ்ரு (Khusru II) ஆவன். அவன் சிறந்த வீரன்: உயர்ந்த குணங்கள் பல ஒருங்கே வாய்க்கப் பெற்றவன். "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" என்பதும் "பாம்பறியும் பாம்பின் கால்" என்பதும் உண்மையுரைகளன்றோ? அதேபோல் வீரர்கள் பெருமையை வீரர்களே அறிவர். அரசர் பெருமையை யரசர்களே யறிவர். மன்னர் பெருமையை மடையர் அறிவரோ? ஆதலின் குஸ்ருவுக்குப் புலிகேசியின் வீர தீரச் செயல்களும் பெருமையும் தெரிந்தவுடன் அவனுக்குப் புலிகேசியினிடத்து அன்புண்டாயிற்று. புலிகேசியும் குஸ்ருவும் ஒருவரை யொருவர் நேரில் பார்த்திராதவர்களா யிருக்கலாம். அவ்வாறு இருப்பினும் என்? உத்தமகர்ளுக்குள் ஒருவரை ஒருவர் பார்த்திராத நிலையிலும் உண்மைத் தன்மையைக் கேட்டறியுங்கால் அன்புண்டாவது இயற்கையே.

"கதிரவ னுதிப்ப தெங்கே? நளின மெங்கே?
களித்துள மலர்ந்த தென்ன!
கார்மேக மெங்கே? பசுந்தோகை யெங்கே
கருத்தில் நட்பான தென்ன!

மதிய மெங்கே ? பெருங்குமுத மெங்கே ? முகம்
மலர்ந்துமகிழ் கொண்ட தென்ன !
வல்லிரவு விடிவ தெங்கே ? கோழி யெங்கே ?
மகிழ்ந்து கூவிடுத லென்ன !
நிதியரசர் எங்கே யிருந்தாலும்; அவர்களோடு
நேசமொன்று யிருக்கும்:
நீதிமிகு நல்லோர்க ளெங்கிருந்தாலும், அவர்
நிறைபட்ச மறவார்கள் காண்.
மதிலுடன் கோபுரமும் வாவியும் புடைசூழ
மருவ சோணுட் டதிபனே !
மயிலேறி விளையாடு குகனே ! புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே !''

என்னும் செய்யுள் கூறுவன உண்மையே யன்றே ?

குஸ்ரூ புலிகேசியினிடத்தில் அன்புகொண்டானதலால் தன் அன்பினை யெடுத்துக் காட்டும் பொருட்டு அவன் வெற்றிகளையும் கீர்த்தியையும் புகழ்ந்து ஒரு கடிதமும், சில சன்மானங்களும் கொடுத்து அனுப்பினன். அதனைப் புலிகேசி பெரிதும் பாராட்டி வந்தனத்தோடு ஏற்றுக் கொண்டான். பின், தானும் அவனுக்குத் தன்னுட்டிலுள்ள பல அற்புதப் பொருள்களைப் பரிசாக அனுப்பித் தந்தனன். இவ்விஷயத்தை அரேபியா தேசத்து யாத்திரிகர் செவ்வையாக எழுதுகிறுர். பாரசிக மன்னனுல் அனுப்பப்பட்டப் பரிசில்களைப் புலிகேசி பெற்றுக் கொண்டான் என்று கூறினேமல்லவா ? அவன் அவைகளைத் தன் அவையில் வரவேற்று அன்போடு உளமகிழ்ந்து பெற்றுக்கொண்டதை அஜந்தாக் குகை

யில் (Aganta Cave) கற்களில் சிற்பிகள் அக்காலத்தில் பொறித்து வைத்துள்ளனர். என்னே பாரசீக மன்னனின் அன்பும், உயர் குணமும்!

சாளுக்கியர்கள் ஆரியர் என்றும், வைதிக மதத்தினர் என்றும் முன்பே கூறியுள்ளோம் அல்லவா? சாளுக்கியர்கள் காலத்தில்தான் பிராம்மண வைதிக மதம் தழைத்தது. சமண, பௌத்த மதங்கள் சிறிது தாழ்வுற்றன வென்பது பொய்யாகாது, சாளுக்கிய அரசர்கள் அனைவரும் வைதிக மதத்தைக் கடைப்பிடித்தொழுகியதாலும், சாளுக்கிய ராஜ்ஜியம் விந்திய மலை முதல் கன்னியா குமரி முனைவரைப் பரவியிருந்ததாலும் வைதிக மதம் விரைவின் மேன்மையடைந்து பரவலாயிற்று. அதிலும் சாளுக்கியர் சுத்த வைதிக சைவ மதத்தினர் என்பதை யாவரும் மறுக்க முடியாது. அதனால் ஜைன, பௌத்த மத நிபுணர்களுக்கும் வைதிக மத நிபுணர்களுக்கும் அடிக்கடித் தர்க்கங்கள் நேரிடுவ துண்டு. சாளுக்கிய மன்னனாகிய புலிகேசி சுத்த வைதிக சைவனாயினும் ஜைன, பௌத்த மதத்தார்களிடம் அன்பும் மதிப்பும் வைத்திருந்தான். அவனுக்குச் சிறிதேனும் மதத் துவேஷ மில்லை என்பதை நாம் அவன் செய்கைகளால் நன்கறியலாம். அவன் ஜைன பௌத்த மதத்தார்களுக்கும் வைதீக மதத்தார்களுக்கும் நேரிடும் வாதுகளில் சென்று அமர்ந்து இருந்து இருதிறத்தார் கூற்றுக்களையும் கேட்டுச் சந்தோஷிப்பான். மேற்றும், அன்னார்களுக்குத் தக்க பரிசில்களும் வழங்கி வந்தனன்.

வாதாபி நகரத்திலும் சாளுக்கிய ராஜ்ஜியத்தின் மற்ற பாகங்களிலும் சிவபெருமானுக்கு ஆலயங்கள் பல சாளுக்கிய வரசர்களால் கட்டப்பட்டன. வாதாபி நகரத்தில் கட்டப்பட்ட சிவன் கோயில் கண் கவர் வனப்பினை யுடையது சாளுக்கியர். காலத்தில் கோயில்களுக்கு இறை நிலங்கள் பல அளிக்கப் பட்டன வெனில் அவைகள் மேன்மையுற் றிருந்த நிலையினைக் கூறவும் வேண்டுமோ? புலிகேசியும் கோயில்கள் பல கட்டினான். அவைகளுக்கு இறை நிலங்கள் பல அளித்துள்ளான். முக்கியமானதும், எக்காலத்தும் நிலைபெற்றிருக்க வேண்டியதுமான விஷயங்களைக் கற்பாறைகளில் பொறித்து வந்தனன். அவ்வாறு செய்து வந்தமைக்குச் சாட்சியாக விளங்குவது அஜாந்தாக் குகையில் குஸ்ருவின் அன்பளிப்பினைப் பெற்ற நிலையைச் செதுக்கப்பட்டிருத்தலே, பல்லவர்களும், சாளுக்கியர்களும் சம காலத்தவர் என்பதோடுமட்டு மன்றி ஒருவர் நாட்டை யொருவர் பற்றிக்கொண்டு அரசாண்டும் வந்துள்ளா ராதலின் பல்லவர் காலத்துள்ள சிற்ப வேலைத்திறன் சாளுக்கியர் காலத்தும் இருந்ததென்பது கூறுதேயமையும். புலிகேசியின் காலத்தில் சிற்ப வேலைத் திறன் மேம்பட்டு விளங்கிய தென்பதை அஜந்தாக் குகையில் செதுக்கப்பட்டதும்,வாதாபியில் சிவபெருமானுக்குக் கட்டப்பட்ட கோயிலும் நன்கு விளக்குவன வாகும். மற்றும், புலிகேசியின் காலத்தில் அச் சாளுக்கிய தேசத்துக் குடிகள் சிறந்த நாகரீகம் பெற்றிருந்தனர். புலிகேசி பரந்த நோக்க முடையவனா

யும் குடிகளிடத்தில் நிறைந்த அன்புடையவனும் விளங்கியதால் அவனைக் குடிகளும் மிக்கப் பிரியத்தோடு நேசித்து வந்தனர். குடிகளுக்குப் பல்விதத்திலும் நன்மைகளைப் புரிவதே அவனுடைய பெரு நோக்கமா யிருந்தது என்பதைக் குடிகள் அவனை நேசித்த காரணத்தால் அறியலாம். யானைப் படைகளும், குதிரைப் படைகளும், காலாட் படைகளும், கப்பற் படைகளும் உடையவனாக விருந்ததால் அவன் நாட்டில் குடிகளுக்குப் பகையரசர்களால் துன்பங்க ளுண்டாகாம லிருந்தன.

கி.பி. 639,—41, வாதாபி நகரத்திற்குச் சீன யாத்திரீகனான ஹு-யான்ஸாங் என்பவன் வந்தான். அவன், பெரும்பாலும் எல்லாத் தேசங்களுக்கும் சென்று ஒவ்வோர் அரசனையும் நேரில் பார்த்தும், அவ்வவ் தேசத்தின் குடிகளின் மதம், நாகரிகம், கல்வி, செல்வம் முதலியனவற்றைத் தெரிந்துகொண்டும், அவ்வவ் தேசத்தின் ஆட்சி முறையைத் தெரிந்தும், பிற விசேஷங்களை யறிந்தும் தன் சரித்திரப் புத்தகத்தில் எழுதியுள்ளான். அந்த யாத்திரீகன் வாதாபி நகரத்திற்கு வந்து நேரிலே புலிகேசியையும் பார்த்துள்ளான். ஆதலின் அவன் புலிகேசியைப் பற்றிக் கூறுவது சிறந்த அத்தாட்சி யன்றோ? ஆதலின் அந்தச் சீன யாத்திரிகன் கூறுவதை நோக்குவோம். அவன் கூறுவது:—

“அவன் (புலிகேசி) க்ஷத்திரியர்களில் ஒருவன். அவன் பெயர் புலகேஷி. அவன் எண்ணங்களும், கொள்கைகளும், ஆழ்ந்த கருத்தும், பரந்த நோக்கமும், சிறந்த பயனு முடை

யவை. அவன் மிகுந்த காருண்ய முடையவன். அவன் நாட்டுக் குடிகள் பரிசுத்த எண்ணத்தோடு பணிந்தொழுகினர். இக் காலத்தில் பிரசித்தி பெற்ற சிலாதித்திய ஹர்ஷ வர்த்தனன் தன் வெற்றிக் கொடியைக் கிழக்கிலும் மேற்கிலும் கொண்டு சென்று தூரத்திலுள்ள ஜனங்கள் தனக் கடங்கி நடக்கவும், பக்கத்திலுள்ளவர்கள் தன்னைக் கண்டு அஞ்சவும் அவன் நடந்து பல இராஜ்ஜியங்களைத் தன்னகப் படுத்தி வந்தான். ஆனால், இந்தச் சாளுக்கிய தேசத்துக் குடிகள் மட்டும் இவனுக் கடங்க வில்லை. அவன் தைரிய முள்ள வீரர்கள் அடங்கிய சேனைகளுடன் இச் சாளுக்கிய இராஜ்ஜியத்தை எதிர்த்தும் இவர்கள் தடுத்து நின்றதை யகற்றிச் செல்ல வியலாதவனானன். இதனாலேயே இச் சாளுக்கியர்களின் போர்த் திறனையும், பழக்கத்தையும் நன்கறியலாம். இராஜ்ஜியத்தின் விஸ்தீர்ணம் 1200 மைல்கள். தலைநகரம் 6 மைல் பரப்புள்ளது. அது ஒரு பெரிய நதிக்கரையில் அமைந்துளதாகும். வளம் பெற்ற பூமி. செல்வமும் நிறைந்தது. விளை பொருள்களை விளைவிப்பது மாகும். மித உஷ்ணப் பிரதேசம். ஜனங்களின் குணங்கள் சிறந்ததும், உண்மையானது மாகும். இந்நாட்டுமக்கள் நெடியவர்களும், செருக்குற்றவரும், மேன்மை பாராட்டுவாரும் ஆவர். எவர் எவ்வித நன்மை புரியினும் அவர் அவர்கள் கருணையைப் பெற்றவர் ஆவர். ஆனால், துன்பஞ் செய்வார்களாயின் அவர்களிடமிருந்து தப்புதல் இயலாது. எவனேனும் நிந்திப்பானாயின் அவர்கள் உயிர் நீப்பினும் நிந்தித்தவனைத் தண்டியாநிரார். எவனேனும் ஆபத்துக் காலத்தில் உதவுவானாயின் அவ்வுதவி புரிந்தவனுக்கு ஆபத்துற்ற காலத்தில் விரைந்து சென்று உதவுவார்கள்; பகைவர்களை அழிப்பதாயினும் அவர்கள் ஆயுதங்களைக் கைக்கொள்ளுமுன் பகைவருக்கும் எச்சரிக்கை செய்தே செல்வர். போரில் எதிர்த்தவர்களைக்

கொல்வார்கள எதிர்க்காதவர்களை விட்டுவிடுவார்கள். ஒரு சேனைத் தலைவன் போரில் சண்டை செய்யாமலோ, தோல்வியுற்றோ திரும்பினால், அவனுக்குப் பெண்ணுடையை உடுத்தி அவனுயிரை யிழக்கும்படிச் செய்வர். அரசாங்கம் அஞ்சா நெஞ்சு படைத்த வீரர்களை நூற்றுக் கணக்காக ஆதரிக்கின்றது. அவர்கள் போட்டியிடுங்கால் மதுவுண்டு மறப்பண்பை யடையவர். அவர்களில் ஒருவன் ஒரு திருகு கத்தியாலோ, ஈட்டியாலோ பதினாயிரம் பகைவர்களைப் புறங்காட்டி யோடும்படிச் செய்வான் அவர்கள் போகும் வழியில் ஒரு மனிதனைக் கொன்றால் அக் குற்றத்திற்குத் தண்டனை யடையார் அவர்கள் எப்பொழுது புறப்பட்டாலும் வாத்தியம் ஒலிக்கும், ஆயிரக் கணக்கான இயற்கையில் கோபமுள்ள யானைகளுக்கும் மது கொடுப்பார்கள். அவர்கள் போர்க் காலங்களில் திறமான மயக்கந் தரும் மதுவை அருந்துவார்கள். அவர்கள் கூட்டங் கூட்டமாக எதிர்ப்பட்டவற்றை நாசமாக்கிக்கொண்டு செல்வர். எத்தகைய பகைவரும் அவர்கள் முன் நிற்க வியலாது. அரசன் இத்தகைய வீரர்களையும் யானைகளையும் உடைமையால் பெருமிதங் கொண்டு அடுத்துள்ள இராஜ்ஜியங்கள் தலையெடுக்காவண்ணம் அடக்குகின்றான். குடிகளில் கற்றவர்கள் பலருளர். அவர்கள் புத்தர்களும் பிராமணர்களு மாவர். பௌத்த மத சந்நியாசிகளின் குகைகளும், இந்துக்களின் கோயில்களும் உள" என்பதே.

சில சரித்திரக்காரர்கள், யாத்ரீகன் மிகப் புகழ்ந்து கூறியுள்ளான் என்றப்பிராயப்படுகின்றனர். அது ஒரு சிறிது உண்மையாயினும் நாம் அதனை அதனால் முற்றிலும் பொய்யென்று தள்ளிவிடக் கூடாது. ஏனென்றால், சீன யாத்ரீகனான ஹூயான் ஸாங் என்

பவன் கி. பி. 639 முதல் 642 வரை த தக்ஷிண பதத்தில் சஞ்சரித்துள்ளான் என்று செவ்வையாய்த் தெரிகிறது. மற்றும் அவன் மாராஷ்டிர தேசங்களில் பெரும்பாலும் ஒவ்வோர் இடங்களுக்கும் சென்று வந்தான் என்பதும் புலப்படுகிறது. புலிகேசியை அவன் அரசவையில் கி. பி. 641 ல் நேரில் கண்டவனும் ஆவன். ஆதலால் அவ மொழிவதில் உண்மை யுண்டு என்று கொள்ளல் பொருத்த முடைத்தாகும். மற்றும், பழைய காலத்தில் நிகழ்ந்த செய்திகளைக் கல்வெட்டு, சாஸனம், நாணயம், சிற்பம், யாத்ரீகர்களின் அபிப்பிராயம் முதலிய இவைகளை ஆதாரமாகக் கொண்டே அறிந்து கொள்ளவேண்டி யிருப்பதால் ஹியூயான்ஸாங் கூறுவதைத் தள்ளிவிடுதற்கு மியலாது. ஆதலின் அவன் கூறியவற்றி லிருந்தும் ஒருவாறு அக்காலத்திய இராஜ்ஜிய நிலையினை நாம் அறிந்துகொள்ளலாம்.

புலிகேசி சாளுக்கிய இராஜ்ஜியத்தை மிக்க மேனிலைக்குக் கொண்டு வந்த குலதிலகன் ஆதலினால் அனைவரும் அவனைப் போற்றிப் புகழ்ந்தனர். அவன் ஆட்சிக் காலத்தில் குடிகளுக்கு விளைந்த நன்மைகள் பல. பாஷா பண்டிதர்கள் பலர் நற்பதவி பெற்று விளங்கினர்: அமைச்சர்களாகவும் இருந்தனர். கற்றறிந்த குடிமக்களின் பிரதிநிதிகள் அடங்கிய குழாங்கள் இருந்தன. அக்குழாங்களில் எத்தகைய விஷயமும் தீர ஆலோசித்து அதனைச் செய்வதோ விடுவதோ என்று துணியப்படும். புலிகேசி தன் குடிகளின் அபிப்பிராயங்களைத் தெரிந்து யாதொரு கரும

மும் புரிவான். அவன் காலத்தில் வைதிக சைவ மதத்திற்கு விசேஷமான நன்மை யுண்டாயிற்று. புலிகேசி சாளுக்கிய இராஜ்ஜியத்தில் கல்வி, செல்வம், வாணிபம், விவசாயம், சிற்பம், முதலியவைகளை மேன்மைப்படுத்துவதில் பெரிதும் முயன்று வந்தான். ஆதலின் சாளுக்கிய ராஜ்ஜியம் பலவிதத்திலும் சீரும் சிறப்பும் அடைவதாயிற்று. விஷ்ணு வர்த்தனன் வெங்கி நாட்டில் தானே தலைவனாய்த் தனித்ததோர் அரசனானான். நாவலிக்கைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட புலிகேசியின் தம்பியான ஜயஸிம்மனும் தனி யரசனானான். அதுபோலவே சந்திராதித்தயனும், ஆதித்தவர்மனும் தனி அரசர்களாயினர். இவ்வாறு சாளுக்கிய ராஜ்ஜியமானது பிரிக்கப்பட்டு ஆளப்பட்டு வந்தது. புலிகேசியின் இரண்டாவது குமாரனான விக்கிரமாதித்தியன் மட்டும் வாதாபி நகரில் தந்தையோடு இருந்தான்.

## 16. புலிகேசியின் முடிவு காலம்

கி. பி. 641 ல் பல்லவர் சிறிது சிறிதாக முயன்று பெரும் படையைத் திரட்டிக் கொண்டனர். காஞ்சியில் இருந்த மகேந்திர வர்மன் இறந்தான். (கி. பி. 625) கி. பி. 625 ல் அவன் மகன் நரசிம்ம வர்மன் அரசனானன். அவன் சிறந்த பராக்கிரமசாலி. வல்லமையும் கீர்த்தியும் வாய்க்கப் பெற்ற பல்லவ வரசர்களில் நரசிம்ம வர்மனு மொருவனுவன். கி. பி. 640 ல் சீன தேசத்து யாத்திரிகனைஹியான்ஸாங் காஞ்புரம் சென்று நரசிம்ம வர்மனையும் நேரில் கண்டனன்.

அவன் கூறுவதாவது.—"பல்லவ ராஜ்ஜியம் திராவிட தேசம். அது வளப்பமுள்ள பூமி. உழவுத் தொழில் சிறப்பாகவும் விசேஷமாகவும் நடைபெற்று வந்தது. தானியங் களும், பழங்களும், மலர்களும் நிறைவாக வுண்டாயின. அப்பிரதேசம் உஷ்ணமானது. மக்கள் தைரியசாலிகளாயும், நம்பிக்கை யுள்ளவர்களாயும், உண்மை பேசுபவர்களாயுமிருந்தனர். கற்றவர்கள் மிகவும் பெருமையாகக் கொண்டாடப்பட்டனர். பத்தாயிரம் பௌத்த சந்நியாசிகளும் அநேக ஜைனர்களும் இருந்தனர். பல்லவ ராஜ்ஜியத்தில் வைதீக சமயக் கோயில்கள் பல இருந்தன. ஐந்து மைல் சுற்றள வுள்ளதாகவும், அழகாக அமைக்கப்பட்டதாகவும் காஞ்சிபுரம் விளங்கியது" என்பதே.

பல்லவர்களும் சாளுக்கியர்களும் நெடுங்காலமாக ஒருவருக் கொருவர் பகைமை பாராட்டிவந்தனர் என்று கூறினே மல்லவா? புலிகேசி, படை

யெடுத்து வந்து தன் தந்தையான மகேந்திர வர்மனைப் போரில் வென்று சென்றதை நரசிம்ம வர்மன் நன்கு அறிவான். அதனால் அவனுக்குப் புலிகேசியின் மேல் தீராப் பகைமை யுண்டு. ஆனால் அக்காலத்தில் புலிகேசி படைவலி பெற்றிருந்தமையாலும், பல்லவ ராஜ்ஜியம் நன்னிலைமையை எய்தாமையாலும், தன்பால் படைவலி குன்றிருந்தமையாலும் நரசிம்மன் புலிகேசியை எதிர்த்து போர்புரிய வியலவில்லை. என்றாலும் புலிகேசியின் திறலை யழித்து அவன் தலைநகரைக் கைப்பற்றிக்கொள்ளவேண்டுமென்ற எண்ணம் அவன் மனத்தை அல்லும் பகலும் உறுத்தியது. அதனால் அவன் கி. பி. 625 முதல் 641 வரை சேனைகளைச் சேகரித்துச் சித்தப்படுத்துவதில் முயன்று வந்தனன், நரசிம்ம வர்மன் அரியணை யேறியது முதல் கி. பி. 641 வரை புலிகேசியை வெல்வதற்கு என்றே வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வந்தான் என்று இதனால் விளங்குகிற தல்லவா?

புலிகேசி, தன் தம்பிமார்களுக்கும், மைந்தர்களில் ஒருவன் நீங்கலாக மற்றவர்களுக்கும், தான் ஜயித்து வந்த நாடுகளை யளித்து அவர்களை ஒவ்வோரிடங்களில் அமர்த்தினன் என்று முன்பே கூறினோம். புலிகேசியுடன் அவனுடைய இரண்டாவது மைந்தனான விக்கிரமாதித்திய சாளுக்கியன் மட்டும் இருந்தனன் என்பதையும் முன்னே உணர்ந்தோம். ஜயித்த ராஜ்ஜியங்களைப் பெற்ற தம்பிமார்களும், மைந்தர்களும் அவ்வவ் விராஜ்ஜியங்களைத் தாங்களே யடையவேண்டும் என்ற எண்ணத்தால் பெரு முயற்

சிகளை அவர்கள் செய்துகொண்டு வந்தனர். அவை யாவும் நாளடைவில் பயனளிப்பனவு மாயின. கி. பி. 640 ல் ஒவ்வொருவராகத் தனித் தனியே சுயேச்சை யாக அரசாளத் தொடங்கினர். கி. பி. 632 லேயே விஷ்ணு வர்த்தனன் வெங்கி நாட்டைத் தனியரசு புரிந்துவந்ததோடு கீழைச் சாளுக்கிய குடும்பத் தினையும் நிலை நிறுத்தினன்.

நரசிம்ம வர்ம பல்லவனிடம் பரஞ்சோதியார் சேனைத் தலைவராக விருந்தார் என்று கூறினோ மல்லவா? அவர் போர்த் தொழிலில் ஈடு மெடுப்பும் அற்றவர். படைகளைத் திரட்டுவதிலும், அப்படை வீரர்களுக்குப் போர்த் தொழிலைக் கற்றுக் கொடுத்தலிலும் சிறந்த திறமை வாய்ந்தவர். மற்றும், அவர் கல்வி கேள்விகளிலும் சிறந்தவர். நரசிம்ம வர்மனுக்கு அவரிடத்தில் உயர்ந்த நன்மதிப்பும், அன்பும் உண்டு. அவர் தன்னிடத்தில் அமைந்திருத்தலாலேயே தனக்குப் படைவலி நிரம்பப் பெற்றதாக நரசிம்ம வர்மன் எண்ணிக்கொள்வான். ஆகவே, பரஞ்சோதியார் அவனிடத்திருந்தது அவனது குலப் பகைவனை சாளுக்கிய வரசனைப் போரில் காணும்படித் தூண்டிய தென்னலாம். ஆதலின், நரசிம்ம வர்மன் ஒருநாள் பரஞ்சோதியாருடன் கீழ்வருமாறு சம்பாஷிக்கலானன்.

நரசிம்ம வர்மன். —சேனைத் தலைவரே! நல்லது. நான் அரியணை யேறியது முதல் என் மனத்தில் ஒரு விஷயம் தோன்றித் தோன்றித் துன்புறுத்துவ துண்டு அதனைப்பற்றி நான் நெடு நாளாக யோசித்து வரு

கின்றேன். அவ்விஷயமோ நடைபெறும்வரை வெளி யிடற் குரியது மன்று. அவ்விஷயம் சிறிது வெளியா யினும் நமக்குறுங் கேடுகள் பலவே. ஆதலின் அவ் விஷயத்தைப்பற்றி இதுவரை ஒருவரிடமும் கூற வில்லை. நாள்கள் பல சிந்தனையிலேயே சென்றன. அவ்விஷயம் நடைபெற்று அதனல் யான் பயன் பெற்றாலன்றி என் மனம் அமைதியா யடையாது. அவ்விஷயமோ நும் துணை கொண்டே செய்யத் தகு வது மாகும். ஆதலின் நும் கருத்தினை யறிதற்கே இன்று உம்தமத் தனித்து வந்து காணுமாறு சொல் லனுப்பினன்.

பரஞ்சோதியார்:—அரசே! நும் மனத்தை இத துணை நாட்களாகத் துன்புறுத்தும் அவ்விஷயம் யாதோ? அதனை விரைவில் அறிய விரும்புகின்றேன். என் முயற்சியால் எத்தகையவிஷயிமாயினும் அதனை முடித்து உம் மனக் கவலையைத் தீர்ப்பேன். இதில் சிறிதும் ஐயமில்லை. தாங்கள் என்னிடம் அத்தகைய விஷயத்தைக் கூறாதிருந்ததே இப்பொழுது என்னை வருத்துகின்றது.

நரசிம்ம வர்மன்.—அந்தணளரே! உம்மிடம் இதுவரையில் அவ்விஷயத்தைப்பற்றிக் கூறு திருந்த தற்குப் பல காரணங்க ளுண்டு. ஆதலின் நீர் வருந் தற்க. இன்று அவ் விஷயத்தைக் கூறுகின்றேன். சேனைத்தலைவரே! யான் இப்பொழுது சாளுக்கிய அரசனை புலிகேசிக்கு அடங்கிய சிற்றரசனக வல் லவோ விருக்கின்றேன். இப் பல்லவ ராஜ்ஜியமோ என் முன்னோர்களால் எவருடைய ஆளுகைக்கும் கீழ்ப்

படியாத இராஜ்ஜியமாகத் தாபிக்கப்பட்டது. அத்தகைய இராஜ்ஜியத்தை யாண்ட என் தந்தையைச் சாளுக்கியவரசனான புலிகேசி போரில் வென்று தன்னுடைய சிற்றரசனாக்கிக் கொண்டான். அவனோ சாளுக்கிய வம்சத்தைச் சேர்ந்த ஓர் ஆரிய மன்னன். எங்கள் வம்சமும் ஆரியர்கள் கூட்டத்தில் ஒன்று. அப் புலிகேசியோ எங்கள் குலப் பகைவன். எங்களுக்குச் சொந்தமான வெங்கி நாட்டைக் கவர்ந்து அப் புலிகேசி தன் தம்பிக் களித்துள்ளதையும் நீர் நன்கறிவீர். பாலக்காட்டில் வாழும் எங்கள் குலத்தாரையும் வென்று அந்நாட் டரசனையும தன் சிற்றரசனாக்கிக் கொண்டான். மற்றும், என் தந்தை காலத்தில் இக் காஞ்சி நகரம் தன் திரண்ட படை படையுடன் வந்து முந்து முற்றுகையிட்டுப் பல துன்பங்களை விளைவித்துள்ளான். ஆதலின் அத்தகைய குலப்பகைவன் கீழ்ச் சிற்றரசனாக விருந்து வாழ்தல் என்னைப் போன்ற வீரம் தன்மை பொருந்திய அரசனுக் கழகோ? என் தந்தைக் குற்ற அவமானமும், பழியும் என்னையுஞ் சார்ந்தன வன்றோ? அப்பழியினை விரைவில் ஒழித்துவிடவேண்டியது என் கடமை யல்லவோ?

ஆதலின், எவ்வகையிலேனும் எம் குடிக்குற்ற பழியை நீக்கி நான் தனியாக அரசு நடத்த விரும்புகின்றேன். இதனை ஆலோசிக்கவே நான் இன்று இங்கு உம்மை வரச்சொன்னது. தாங்கள் தீர ஆலோசித்து இவ் விஷயத்தைப்பற்றி எனக்குக் கூற வேண்டும்.

பரஞ்சோதியார் :—மன்னவ, தாங்கள் கூறின யாவும் என் மனத்திலும் முன்பே தோற்றிய துண்டு. ஆயினும் நாம் தக்க பலத்தை யடையும் வரை அவ் விஷயத்தைப்பற்றிச் சிந்தித்தலும் தீங்கு விளைப்ப தாம் என்றெண்ணி வாளாயிருந்தனன். இத்துணைக் காலமும் நான் சேனைகளிற் தயாரிப்பதிலேயே கண் ணுங் கருத்துமா யிருந்தேன். இப்பொழுது நம்படை வலி பெற்றுள்ளது. ஆதலின், அரசே! நீர் எதற்கும் அஞ்ச வேண்டுவ தில்லை. நமக்கு இனி நல்ல காலமு முண்டு. எவ்விதத்தினும் நாம் குலப் பகைவனை சாளுக்கிய புலிகேசியைவென்று நம்முடைய தொன்று தொட்டு வரும் புகழையும், கீர்த்தியையும் நிலை நாட்ட லாம் என்னும் உறுதி என் மனத்தில் தோன்றியுள் ளது. ஆதலின், அரசே! எதற்கு மஞ்சேல்.

நரசிம்ம வர்மன் :—பரஞ்சோதியாரே, இப் பொழுதே என் மனத் துன்பம் நீங்கியது. இனி நான் எதற்கும் அஞ்சேன். மறையவரே, சேனைகளைத் திரட்டிப் படைவலியை விருத்தியாக்கிவைத்துக் கொள்வது நம் கடன். சென்று வருக.

இவ்வாறு இருவருக்கும் சம்பாஷணை நடந்த சில திங்களுள் நரசிம்மவர்மன், படை, வலிபெற்றிருப் பதை யுணர்ந்தான். கி. பி. 641ல் அவன் சிறந்த வீரர்கள் அடங்கிய படைகளையுடையவ னாயினன். அப்பொழுது அவன் மனம் சிற்றரசனாகி யிருக்கும் நிலையை ஏற்றுக்கொள்ள விரும்ப வில்லை. அவன் எவ்விதத்திலாயினும் தன் குலப் பகைவனை புலி கேசியைப் போரில் எதிர்ப்பதெனத் தீர்மானத்தை

யடைந்தவனுகிப் போருக்கு வேண்டுவன வற்றைச் சேகரிக்க லாயினன். அச் செய்தி புலிகேசிக்கு எவ்வாறே எட்டியது. தன்னுல் ஜயிக்கப்பட்டுத் தன் கீழடங்கிச் சிற்றரசனுக விருந்த வொருவன் தன்னையே எதிர்ப்பதற்குப் படை திரட்டுகின்றுன் என்றுல் அஃது எம் மன்னனுக்கும் சினத்தை யுண்டாக்குவதன்றே? அச்செய்தியை யறிந்த புலிகேசி மிகவும் சீற்றங் கொண்டான். நரசிம்ம வர்மனை தன்னை எதிர்ப்பதன் முன் அவனை எதிர்த்து வெற்றி கொண்டு அவன் கொண்ட எண்ணத்தை ஒழிக்க வேண்டும் என்னும் எண்ணம் புலிகேசிக் குண்டாயிற்று. அதனுல் புலிகேசி வாளா விருக்க விரும்பவில்லை. வலி மிக்க திரண்ட படைகளைச் சேர்த்துக் கொண்டு புலிகேசி விரைந்து சென்று காஞ்சி நகரத்தை முற்றுகை யிட்டு நரசிம்ம வர்மனைத் தன் கீழுள்ள கப்பங் கட்டும் சிற்றரசரில் ஒருவனென்று ஒப்புக்கொள்ளும்படி வற்புறுத்தினன். நரசிம்ம வர்மனே புலிகேசியைப் போரில் திறலழித்தும் தன் குடிக் குண்டாக்கிய பழிக்குப் பழி வாங்கச் சமயம் பார்த்திருந்தனன். புலிகேசியே போருக்கு வலிய வந்தது நரசிம்ம வர்மனுக்குப் பெரிதும் அநுகூலமாயிற்று. ஆதலின் புலிகேசி வற்புறுத்தியவாறு ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டான். அவனுல் புலிகேசி சினமடைந்து பல்லவனைப் போருக் கழைத்தனன். சேனைகளைத் தயாரித்துப் பரஞ்சோதியார் வைத்துள்ளார் என்பதை நன்கறிந்த பல்லவன் புலிகேசி போருக்கு அழைத்ததைக் குறித்து ஒரு சிறி

தும் அச்சங்கொள்ள வில்லை. பரஞ்சோதியார் தாமும் போர்க்கோலம் பூண்டவராய்ப் படைகளைப் போர் முனைக்கு அழைத்துவந்தார். பல்லவ வரசனும் போர்க் கோலம் பூண்டும் தன் குடிப் பகைவனை புலிகேசியைப் போர் முனையில் காண வீர தீரத் தோடுபுறப்பட்டு வந்தனன். புலிகேசிக்கும் நரசிம்ம வர்மனுக்கும் போர் நிகழப் போகும் செய்தி பல்லவ நாடெங்கும் விரைவில் பரவலாயிற்று. குடிகள் அனை வரும் அப்போரினால் யாது தீங்கு விளையுமோ என்று அஞ்சினர். அவர்கள் பல்லவனுக்கு வெற்றி யுண்டாகுமாறு இறைவனை வேண்டினர்.

கி. பி. 642ல் புலிகேசிக்கும் நரசிம்ம வர்மனுக் கும் போர் நிகழ்ந்தது. அப்போர் நெடுநாள் வரை நிகழ்ந்தது. அப்போரில் நரசிம்ம வர்மன் சிறிதும் அச்சமுறாது தன் படைகளுடன் புலிகேசியை எதிர்த் தான். புலிகேசி தான் நினைத்தபடி யெளிதில் பல் லவவரசன் கீழ்ப்படியாது வீரத்தோடு எதிர்த்துப் பொருதலை யுணர்ந்தான். எத்தகையராயினும் ஒரு வருக்கு எப்பொழுதும் வெற்றியே யுண்டாகாது. அன்னார்க்கும் தோல்வி யுண்டாதல் இயல்பே. போரில் பரஞ்சோதியார் தம் திறல் விளங்கப் படை களை நடத்திப் பகைவர்களை அஞ்சாது எதிர்த்தார். புலிகேசியின் வீரர்கள் மிக்க விறலொடு பொருதார் கள்; ஆயினும் பல்லவர் சேனைகள் கடலலைகள்போல் மேன்மேலும் தருதலை யறிந்து நெஞ்சங் கலங்கினர். பரஞ்சோதியார் சேனைகளைத் திறன்பட நடத்திய விதத்தால் புலிகேசியின் சேனை வீரர்கள் பின்

னடைவா ராயினர். படைவலி குறைவுற்றமையையும், பல்லவன் அஞ்சாது பொருதலையும், தன் சேனை வீரர்கள் பின் வாங்குவதையும் அறிந்த புலிகேசியின் மனதும் குழப்ப மடைந்தது. புலிகேசியின் படை மெலிவுற்றிருப்பதை யறிந்த பரஞ்சோதியார் மன்னனுக்கும் சேனை வீரர்களுக்கும் மன வெழுச்சியைத் தம் வீர மொழிகளால் உண்டாக்கிப் புலிகேசியைத் துரத்திச் செல்லும்படிச் செய்து தாமும் தொடர்ந்து சென்றனர். புலிகேசி பின்னடைவானான்.

பரஞ்சோதியாரும் நரசிம்ம வர்மனும் புலிகேசியைத் துரத்திக்கொண்டே சென்று வாதாபி நகரிற் புகுந்தனர். வாதாபி நகரத்தோ ரனைவரும் அச்சங் கொண்டனர். புலிகேசி தன் நகரத்தாரைக் காப்பாற்றும் பொருட்டுத் தன் மகன் விக்கிரமாதித்தியனோடு தானும் பகைவர்களைப் போரில் வெல்ல பெரு முயற்சிகள் செய்தான். அந்தோ! யாவும் பயனற்றன வாயின. பரஞ்சோதியாரும பல்லவனும் வீர தீரத்தொடு பொருது புலிகேசியைப் போரிற் கொன்றார்கள். புலிகேசி தன்னுயிரைப் போர்க் களத்தே போக்கி வீர சுவர்க்கம் பெற்றனன். நகர மாந்தர் அனைவரும் பெரிதும் வருந்தினர்.

பல்லவன், தான் சிற்றரசனாக விருந்ததை யொழித்துப் புலிகேசியின் மைந்தனைத் தனக்குச் சிற்றரசனாக்கிக்கொண்டு, வாதாபி நகரத்தைப் பாழ்படுத்தி, வெற்றிமுரச மொலிப்ப, பரஞ்சோதியாருடன் வாகை சூடிக்கொண்டு காஞ்சிபுரத்தை யடைந்தான். பல்லவன் பரஞ்சோதியாரைப் புகழ்ந்து

கொண்டாடினன். குடிகளனைவரும் மன்னனையும் பரஞ்சோதியாரையும் புகழ்ந்தனர். நரசிம்ம வர்மன், பரஞ்சோதியார் ஒரு சிவனடியார் என்பதைச் சில நாட்களுள் கேள்விப்பட்டு அவருக்கு வேண்டுவன வளித்து இறைபணி புரியுமாறு விடுத்தனன். பரஞ்சோதியார் மன்னனைப் பாராட்டி விடை பெற்றுக் கொண்டு சோழ நாட்டில் திருச்செங்காட்டங்குடியை யடைந்து ஆங்கு அடியார்களைப் பேணி இறைபணி புரிந்து வாழ்ந்து வந்தனர். அக்காலத்தில் சீராளன் என்னும் பெயருடைய அருமைப் புதல்வன் ஒருவன் அவருக் கிருந்தான். ஒரு நாள் இறைவன் அந்தணர் உருக்கொண்டு அடியார்களுக்கு வேண்டுவன வளித்து வரும் பரஞ்சோதியாரிடம் வந்து வேண்டிய வண்ணம் தாயும், தந்தையும் களி கொண்ட முகத்தினராய் வாள் கொண்டு அம் மைந்தனை அரிந்திட்டுச் செயற் கருஞ்செய்கை செய்து சிறுத் தொண்டர் என்னும் நாமம் இன்றும் இவ்வுலகில் நின்று நிலவ, தாமும் மனைவியும் நற்பேறு பெற்றனர். பல்லவனும் சிறக்கலானன். புலிகேசிக்குப் பின் விக்கிரமாதித்தியன் சாளுக்கிய இராஜ்ஜியத்திற்கு அரசனனன்.

புலிகேசியை நரசிம்ம வர்மன் போரில் கொன்றான் என்றும், அவன் வாதாபி நகரைப் பலவாருக அழித்தான் என்றும் கூறினே மல்லவா? அவ் விஷயத்தில் சரித்திரக்காரர்களுக்குள் அபிப்பிராய பேதமுண்டு. அவ் வபிப்பிராய பேதங்களையும் உணர்தல் அவசியமே யாகும். புலிகேசியைப் போரில் நரசிம்ம வர்மன் கொன்றான் என்பதையும், வாதாபி நகரை யழித்

தான் என்பதையும், "பல்லவர்களின் சரிதமும் ஆதிக்கமும்" என எழுதிய சரித்திர வாராய்ச்சி வல்லுநர், ஸ்ரீமான் C. S. சீனிவாசாச்சாரியார் அவர்களும் C. V. வைத்தியர் என்பவரும், சரித்திர வாசிரியர் வின்ஸென்ட்ஸ்மித் துரைமகனரும், E. மாஸ்டன் துரைமகனரும், ஒப்புக்கொள்ளுகின்றனர். ஆனல், தக்ஷிணபதத்தின் சரிதையை எழுதிய இராம கிருஷ்ண கோபால் பண்டார்கர் புலிகேசியின் முடிவைப்பற்றி ஒன்றுமே கூறவில்லை. புலிகேசிக்குப் பின் அவன் மகன் விக்கிரமாதித்தியன் அரியணை யேறினன் என்பதை மட்டுங் கூறுகிறார். பெரிய புராணத்தில் உள்ள சிறுத்தொண்டர் புராணத்தில்.

'ஈசனடி யார்க்கேன்று மியல்பான பணிசெய்தே
யாசில் புகழ் மன்னவன்பா லணுக்கரா யவற்காகப்
பூசன்முனைக் களிறுகைத்துப் போய்வென்று பொருமரசர்
தேசங்கள் பலகோண்டு தேர்வேந்தன் பாற்சிறந் தார்.''

"மன்னவர்க்குத் தண்டுபோய் வடபுலத்து வதாவித்
தோன்னகரந் துகளாகத் துளைநெடுங்கை வரையுகைத்துப்
பன்மணியு நிதிக்குவையும் பகட்டினமும் பரித்தொகையும்
இன்னனவேண் ணிலகவர்த்திங் கியலரசன் முன்கோணர்ந்தார்."

என்னும் செய்யுளினல் வாதாபி நகரத்திற்குப் படையொடு சென்று வென்று வந்தார் என்பது தெரிகிறது. மற்றும், பின் காலத்தில் நரசிம்ம வர்மனை

"வாதாபி கொண்ட போத்தரையன்" என்றழைக்கப்பட் டிருத்தலால் புலிகேசியைப் போரில் வென்று வாதாபியை நரசிம்ம வர்மன் அழித்தனன் என்பது புலப்படுகிறது.. நரசிம்ம வர்மன் ஆட்சிக் காலம் முடிய சாளுக்கிய ராஜ்ஜியம் மலினப்பட் டிருந்தது.

புலிகேசிக்குப் பின் இவனுடைய இரண்டாவது மகன் அரசனானன். அவன், தந்தையைப் போல் பராக்கிரமம் வாய்ந்திருந்தமையின் கி. பி. 655 ல் நரசிம்மவர்மனின் மைந்தனான பரமேசுவர வர்மனைப் பெரும்படையுடன் சென்று எதிர்த்தான். சித்திர காந்தாவென்னும் குதிரைமேலேறிக்கொண்டு வாளைக் கையில் ஏந்தியவனைப் பல்லவனை ஜயித்துப் பல்லவ வரசனைத் தன் பாதத்தில் முத்தமிடும்படிச் செய்தான். விக்கிரமாதித்தியன் காஞ்சியைக் கைப்பற்றிக் கொண்டான். யானைகளையும், விலை யுயர்ந்த சிகப்புக் கற்களையும், பிறவற்றையும் நிரம்ப எடுத்துக்கொண்டு வாதாபியை யடைந்தான். வாதாபி நரகம் முன்னிலும் சிறப்புற விளங்க லாயிற்று. சாளுக்கிய ராஜ்ஜியம் நிலை நிறுத்தப்பட்டது. சாளுக்கிய மன்னனான விக்கிரமாதித்தியன், சேர, சோழ, பாண்டிய, பல்லவ வரசர்கள் தன் ஆளுகைக்கு உட்பட்டிருக்கத் தந்தையைப்போல் கி. பி. 642 முதல் கி. பி. 680 வரைச் சீரும் சிறப்பும் பெற்றுச் சாளுக்கிய இராஜ்ஜியத்தை ஆண்டுவந்தான்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

முற்றிற்று.

———

## சாளுக்கிய வம்ச விருக்ஷம்

ஜயஸிம்மன்
|
இரணராகன்
|
(சத்யாசிரய ஸ்ரீ வல்லவ) புலிகேசி முதலாவான் = துர்லபாதேவி
கி. பி. 550

- முதலாவது கீர்த்திவர்மன் (கி. பி. 567-581)
  - இரண்டாவது புலிகேசி (கி.பி. 610—642)
    - சந்திரா தித்தியன்
    - விக்கிரமாதித்தியன் (கி.பி. 642—688)
    - ஆதித்திய வர்மன்
    - ஜயஸிம்ம வர்மன்
  - குப்ஜ விஷ்ணு வர்த்தனன்
  - குப்ஜ ஜய ஸிம்மன்
- மங்கலீசன் (கி. பி. 581-610)

## பல்லவர் வம்சாவளி.

| | | |
|---|---|---|
| சிம்ம விஷ்ணு | .... கி.பி. | 590 |
| மகேந்திர வர்மன் I .... | ,, | 618 |
| நரசிம்ம வர்மன் I .... | ,, | 646 |
| மகேந்திர வர்மன் II .... | ,, | 660 |
| பரமேஸ்வர வர்மன் I .... | ,, | 674 |



The Kesari Printing Works, Madras.